


ஐந்தாவது மாதத்தில் அனு உட்கார ஆரம்பித்தான். ஒன்பது மாதங்களில் அவனது பிறப்பு எடை மும்மடங்காகியது...படு சுட்டியாக வளைய வரும் இக்குழந்தையைத் தாய்மார்கள் வியப்புடன் கண்டு மகிழ்ந்தனர். அவனுடைய வலிமையான ஆரோக்கியத்தின் இரகசியம்: விசேஷமான ஒரு குழந்தை உணவு.







அறிமுகப்படுத்திய இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே குழந்தை உணவுகளுக்குள்ளேயே உச்ச விற்பனை எய்தியுள்ள அமுல்ஸ்ப்ரே ஒரு புதிய சாதனை புரிந்துள்ளது. அருமையான உங்கள் குழந்தைக்கு விசேஷமான ஊட்டச் சத்தை அளிப்பதற்காக ஒரு விசேஷமான செய்முறை (ஸ்ப்ரே-டிரையிங்) மூலம் விசேஷ ஆக்கம் பெற்றது அது. சீரணிக்க எளிதான அமுல்ஸ்ப்ரே சரிவிகிதமான ஊட்டச் சத்தை அளிக்கிறது: அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் உட்பட உடலும் மூளையும் வளர அதிக அளவில் தரமான புரதச்சத்து.

# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாக புகட்டச் சிறந்தது.**

ASP/AS-11

# இளமையின் வேகம் எதுவோ?

அதுவோ....அந்த அலாதி கவர்ச்சி.... டாடா டெக்ஸ்டைல்ஸின் துணிகள் அணிந்து செல்லும் இளைஞர்களை மொய்க்கும் விழிகள், வைத்த விழி வாங்காமல் பார்த்துக்கொண்டே இருக்கின்றன. ஆம்...அத்தனை கவர்ச்சி ஆண்மைக்குரிய கம்பீரம் நிறைந்த நிறங்களில், டாடா டெக்ஸ்டைல்ஸின் டிறில், பாப்ளின் துணிகளில் பாண்ட் சர்ட்டுகள் தைத்துக் கொண்டால், அலுவலகங்களுக்கும்—பிற சந்தர்ப்பங்களுக்கும்அணிந்துமகிழலாம். எமினன்ஸ் ஹால்மார்க், ஸ்டராங்—ஹோல்ட் மற்றும் டாஷ்கண்ட் என்ற பெயர்களில் எங்களின் பாப்ளின்கள் கிடைக்கின்றன. வேண்டியதை விரும்பித் தேர்ந்தெடுங்கள்.



**TATA** Textiles

ULKA TT-123 Tam

# இருமலா?

# பெப்ஸ்

## இருமல மற்றும் தொண்டைப் புண்களுக்கு எதிராக விந்தைச் செயல் புரிகிறது

லாஸஞ்சைப போல வாயில் அடக்குங்கள் பெப்ஸ். பாது காப்புடன் இதமளிக்கும் மூலிகைச் சத்துக்கள் விரை விலே வெளிப்படுகின்றன. இந்த அரிய சத்துக்கள் மூச்சுடன் கலந்து உங்கள் தொண்டையையும் சுவாச கோசத்தையும் நெகிழ்த்து கின்றன. இருமலோ, தொண்டைப் புண்ணோ அல்லது ஜலதோஷமோ உங்களைத் தொற்றும்போது பெப்ஸ் சக்தியுடன் இதமளிக்கிறது.




**பெப்ஸ்** 50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பகமான இருமல் நிவாரணி

ASP/P-2

# ப்ளாஸ்டார்ச்

## வாங்கும்போது நீங்கள் பெறுவது

## உள்ளும் புறமும் உன்னதமான ஒரே டார்ச்

அரிக்கும் போகாத தன்மையுடையது!

பாட்டரி ஆயுளை நீடிக்கச் செய்வது!

பாட்டரியின் ஆயுளை நீடிக்கச் செய்யும் வகையில் அது ரு இவ்வளவு பாதுகாப்பளிக்கும் டார்ச் வேறெதுவுமில்லை. முழுப் பிரகாசத்தை அளிப்பதற்கென செடலேன்ட் கேப்ளெக்டர் கொண்டது ப்ளாஸ்டார்ச்ஸ்விட்சை அணைத்தவுடன் கரெண்ட் தொடர்பை முற்றிலும் அகற்றிவிடும் பேடென்ட் செய்யப்பட்ட 2-பட்டை ஸ்விட்ச் உள்ளது. ப்ளாஸ்டார்ச் முழுவதும் ப்ளாஸ்டிக்கினாலானது. கசிவு ஏற்படாது, துருப்பிடிக்காது, அரித்துப் போகாது. தவிர, ஒரு போதும் உடையாது! முரட்டுத்தனமாக உபயோகித்தாலும், சிறிதும் நசுங்காத அளவுக்கு வலுவுள்ளது. ப்ளாஸ்டார்ச் பல கண்கவர் வர்ணங்களில் கிடைக்கிறது—விருப்பமானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்







நிபுணத்துவம்வாய்ந்த தொழில்நுட்பத்திறனின் பயனே ப்ளாஸ்டார்ச்!

# CENTURY RAYON makes YOUR HOME



# A SWEETER HOME!

Century Rayon provides furnishings—rich and glowing, or sober and subdued; in staid, traditional designs as well as in madly modern designs; curtains, upholstery material, bed-sheets, pillow-covers...for your family a rich assortment of Cenray fabrics—sarees, dress materials, suitings, shirtings...better in texture, better in colours and designs than any other available fabrics.

Cenray, a Division of Century Rayon, continuously devotes itself to the development of new designs, new mixings, new blends, to promote and popularise the use of rayon. It provides technical counsel and marketing facilities to manufacturers of rayon fabrics who adhere to the exacting standards laid down by Century Rayon's Research and Consumer Service Section. Century Rayon, in short, helps make life not only colourful and comfortable, but also much more exciting!




**CENTURY RAYON,**
Industry House,
159, Churchgate Reclamation,
Bombay 20.

**'நான் எப்போதுமே காலைச் சிற்றுண்டியில் தாமிர சத்தைப் புசிக்கிறேன்!'**

அத்துடன் இரும்புச் சத்து, கால்ஷியம் மற்றும் அயோடினும் உள்ளன. உண்மையில் இவர், 8 முக்கியமான மினரல்களையும் 11 அத்தியாவசிய விடமின்களையும் உட்கொள்ளுகிறார். ஆம்! இவை அனைத்துமே விம்க்ரான் மாத்திரை ஒன்றில் அடங்கியிருப்பது ஆச்சரியமல்லவா! நல்ல ஆரோக்கியம், ஆற்றல் மற்றும் நோய்களை எதிர்க்கும் வலுவான சக்தியைப் பெறுவதற்கு அவசியமான எல்லா விடமின்களும் மினரல்களும் விம்க்ரானில் அடங்கியுள்ளன. எடுத்துக் காட்டாக, சீரான இரத்த அமைப்பைப் பெறவும், ஆற்றலைப் பெருக்கவும் தாமிரச் சத்து. இது மட்டு மல்ல; விம்க்ரானிலுள்ள விடமின் களும் மினரல்களும் அளிக்கும் நற்பலன்களால் இவர் நல்ல சருமம், கூரிய கண்பார்வை, வலுவான பற்கள் மற்றும் எலும்புகள் பெற்று மகிழ்ந்து வருகிறார்.

**நாள் முழுவதும் உங்களை சக்தியுடன் வைத்திருக்க ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை போதுமானது.**

விலை 13 பைசா மட்டும்

SQUIBB

SARABHAI CHEMICALS






# விம்க்ரான்

மல்டிபின் விடமின்—
மினரல் டேப்லெட்டுகள்

Shilpi-VIM-11A/70 Tam.

# "அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரே போல் கெட்டிக்காரி!"

ஹார்லிக்ஸ் அவளைக் கெட்டிக்காரியாக மாற்றிற்று!

வளரும் குழந்தைகளுக்கு தெம்புடன் திகழத் தேவையான அதிக சக்தியை அளிக்க ஹார்லிக்ஸ் உதவுகிறது. டாக்டர்கள் குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். உங்கள் மகளுக்கும் ஹார்லிக்ஸ் தேவை!



ஆனால், சில நாட்களுக்கு முன் அவளுக்கு ஒரே மந்தம்; நான் டாக்டரை விசாரித்தேன்.

டாக்டர் சொன்னார்: "அவளுக்கு தினமும் ஹார்லிக்ஸ் கொடுங்கள்."

ஹார்லிக்ஸ் சாப்பிட்ட பின் அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும் ஒரேபோல் கெட்டிக்காரியாக மாறிவிட்டாள்!



HL 7573 A

ஆடைச்சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்ந்தது




## ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!



"அதிகமான வேலையில் ஈடுபட்டிருக்கும் போது சில சமயம் எனக்குக் கடுமையான தலைவலி வருகிறது"

என்கிறார் விபின் ஜெயின்
பம்பாய் ஆபீசர்

# தலைவலியா? விரைவிலே குணம் பெற அனாஸின் சாப்பிடுங்கள்



## வயது வந்தவர்களுக்குப் போதுமான சக்தி வாய்ந்தது குழந்தைகளுக்கு நம்பகமானது

அனாஸின் சக்தி வாய்ந்தது—உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிக-மாகச் சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது. அனாஸின் நம்பகமானது. டாக்டரின் மருந்தைப் போல பல மருந்துகளின் சரிவிகிதக் கலவையே அது. தலைவலி, ஜலதோஷமும் ஃப்ளூவும், முதுகுவலி, பல்வலி, மற்றும் தசை வலிகளுக்கு அனாஸின் சாப்பிடுங்கள்.

A-41.

சக்தி வாய்ந்த, நம்பகமான

# அனாஸின்

இந்தியாவின் மிகப் பிரசித்தமான வலி நிவாரணி




Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

# கல்கி பொருளடக்கம்



சாதாரண, புரட்டாசி 11 :: 1970 செப்டம்பர் 27





சிறு கதைச் சிறப்பு இதழ்




| | | |
|---|---|---|
| கனவு நனவாகிறது ! | (தலையங்கம்) | — 11 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | ... | — 12 |
| ★ பிறந்த நாள் | கல்யாணிசுந்தரி ஜகந்நாத் | — 15 |
| பொன்னியின் செல்வன் | அமரர் கல்கி | — 17 |
| ராமாயணம் | ராஜாஜி | — 28 |
| சிதம்பர ரகசியம் | கோமதிசுவாமிநாதன்-ராமு | — 32 |
| தர்ம யுத்தம் (நாடக மேடை) | ... | — 35 |
| போராட்டங்கள் | ர. சு. நல்லபெருமாள் | — 37 |
| ரகுபதி ராகவ | தமிழாக்கம்: ராஜாஜி | — 43 |
| உடலுக்கும் மருத்துவம்... | பேட்டி: ஏ.சுவாமிநாதன் | — 45 |
| ஹெலிகாப்டர்கள்.... | இந்திரா பார்த்தசாரதி | — 46 |
| ★ ஊர்வசி வந்தாள் ! | ஸ்ரீனிவாசா உத்காதா | — 56 |
| ★ மலையும் மடுவும் | சிரவண் குமார் | — 61 |
| ★ இந்தப் புதுக் குடியிருப்பு | ஸாலிஹா ஆபித் ஹுஸைன் | — 72 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |




"இது ருஷியாவுக்குப் போகும் சாலையா?"

"ஆமாம். சரியான ரோடுதான். போங்கள்!"

Samay

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்







# கனவு நனவாகிறது!

தமிழகத் தொழில் வளர்ச்சி வரலாற்றில் சென்ற 16ந் தேதி புதன் கிழமையன்று ஒரு முக்கியமான அத்தியாயம் தொடங்கியது. அன்று சேலம் உருக்காலை வேலை தொடங்குவதற்கு அதிகாரபூர்வமாகப் பச்சைக் கொடி காட்டப்பட்டது. இந்த முக்கியமான திட்டத்தைப் பல ஆண்டுகள் தாமதத்துக்குப் பின், இப்போது ஆரம்பித்துத் தந்திருக்கிறார்கள்.

சேலம் உருக்காலைத் திட்டம் மேற்கொள்ளப்பட்டதைத் தமிழகம், குறிப்பாகத் தமிழகத் தொழிலகளும், தொழிலதிபர்களும் ஆவலுடன் வரவேற்று நன்றி கூறுகிறார்கள். புதுத் தொழில்கள் ஆரம்பிக்கப் பல புதிய வாய்ப்புகள் இதை மையமாகக்கொண்டு தோன்றும் என்று வேலையில்லாமல் தவிக்கும் பல பட்டதாரிகளும், பொறி இயல் வல்லுநர்களும் உற்சாகத்துடன் இருக்கின்றனர். ஆரம்பிக்கப்பட்ட நல்ல காரியம் தடை ஏதுமின்றி விரைவில் முன்னேறி உற்பத்திக் கட்டத்தை அடையட்டும் என்று நாமும் வாழ்த்துகிறோம்.

உருக்காலைக்கு வேலை தொடங்குவதற்கும் எஃகுப் பொருள்கள் தொழிற்சாலையிலிருந்து உற்பத்தியாகி வெளி வருவதற்குமுள்ள இடைக்காலம் மிகவும் நீண்டது. இப் பணி தடையின்றி நடைபெற்றாலே நான்கு ஆண்டுகள் பிடிக்கலாம். காலம் நீடிக்க, நீடிக்க முதலீடும் அதிகம், செலவும் அதிகம், நஷ்டமும் அதிகமாகும். சர்க்கார் துறை தொழில்களில் இம்மாதிரி அநுபவங்களை நாடு பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது. பொகாரோ எஃகுத் தொழில் விவகாரம் நம் கண் முன்னே நின்று கொண்டிருக்கிறது. சேலம் உருக்காலையும் சர்க்கார் துறையிலேயே முழுக்க முழுக்க இயங்கப் போவதால், முன் அநுபவங்களிலிருந்து பெற்றுள்ள படிப்பினைகளைக் கொண்டு திட்டத்தைத் திறமையுடன் வேகமாகப் பூர்த்தி செய்ய வேண்டியது அவசியம்.

பூர்வாங்க வேலைகள் நடந்துகொண்டிருக்கும்போதே, முடிவு செய்யப்படாமல் விட்டு வைத்துள்ள பல முக்கிய பிரச்னைகளை முடிவு செய்து கொள்வது நலம். உதாரணமாக இத் தொழிற்சாலையில் தயாரிக்கப் போகும் எஃகு எத்தகையது — சாதாரண எஃகா அல்லது சிறப்புக் கலவை எஃகா என்பதை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். விசேஷக் கலவை எஃகுப் பொருள்கள் தயாரித்தால் தொழில் வளர்ச்சிக்கு உபயோகமாக இருப்பதுடன், குறைந்த விலையில் உற்பத்திசெய்யலாம் என்று நிபுணர்கள் கூறுகின்றனர். எனவே கூடிய சீக்கிரம் இதை நிர்ணயம் செய்து கொள்வது நல்லது.

இரண்டாவதாக உற்பத்திச் செயல் முறைகளும் இன்னமும் நிர்ணயம் செய்யப்படவில்லை. புதுப் புது முறைகள் நடைமுறையில் இருப்பதால் சாதாரண ஊது உலை முறையா, மின்சார முறையா என்பது போன்ற அம்சங்களைத் தீர்மானம் செய்து கொள்வதும் அவசியம்.

இப்போதைக்கு ஆண்டுக்கு ஐந்து லட்சம் டன்கள் எஃகு உற்பத்தி செய்வதென்று திட்டம் போடப்பட்டிருந்தாலும், திட்டம் அமுலாகும் நாள் வரும்போது இதை விஸ்தரிக்க வேண்டிய அவசியம் ஏற்படக் கூடும். எனவே பூர்வாங்க வேலைகளை மேற்கொள்ளும் போதே பின்னால் விஸ்தரிப்பும் செய்ய வேண்டியிருக்கும் என்று எதிர்பார்த்துச் செயல்படுவது விவேகமாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சேலம் உருக்காலைக்கு ஒதுக்கப் பட்டிருக்கும் 100 கோடி ரூபாய் இப்போதெல்லாம் எஃகாலை நிறுவனங்களின் முதலீட்டுப் போக்குகளைக் கவனிக்கும்போது மிகக் குறைவு என்று எளிதில் விளங்கும். அன்னியச் செலாவணி விஷயமாயினும் சரி, நம் சர்க்காரே ரூபாய் வழங்குவதாயினும் சரி, பணத் தட்டுப்பாடு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நெய்வேலித் திட்டத்தின் ஆரம்ப கால முதலீட்டையும் இப்போது செய்யப் பட்டிருக்கும் முதலீட்டையும் ஒப்பிட்டால், இதன் முக்கியத்துவம் விளங்கும்.

இவைகள் எல்லாம் மத்திய சர்க்கார் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டி

யவை. மாநில அரசின் கவனம், சேலம் உருக்காலையைக் கேந்திரமாக வைத்து, அக்கம் பக்கத்தில் என்னென்ன தொழில்களை எப்படி அமைக்கலாம் என்ற ஏற்பாடுகளைச் செய்வதில் இருக்க வேண்டும். இப்போது சென்னையிலும் சென்னையைச் சுற்றிப் பதினைந்து மைல் வட்டத்துக்குள்ளும் பல தொழில்கள் குவிந்துள்ளன. இதேபோல் நெய்வேலியிலிருந்து சேலம் வரையிலும் ஒரு தொடராகச் சிறியனவும், பெரியனவுமாகப் பல தொழிற்சாலைகள் அமைந்து விட்டால், தமிழகத்தின் தொழில் வளம் பெருகுவதுடன் நகரங்களில் உள்ள நிர்ப்பந்தங்களும் குறையும். இது விஷயத்தில் தமிழக அரசு விசேஷ கவனம் செலுத்த வேண்டும்.

நாட்டின் முன்னேற்றத்துக்காக ஏற்பட்ட திட்டம் இது. இதை ஒரு சாதனமாகப் பயன்படுத்திக் கட்சிச் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளவோ, தொழிற்சங்க ஆதிக்கத்தைப் பெருக்கிக் கொள்ளவோ எவரும் முற்படக்கூடாது. முக்கியமாக இந்தத் திட்டத்தைச் செயலாக்குவதற்கு அரும் பாடுபட்ட இன்றைய தமிழக அரசாங்கத்தையும் முன்பே பெருமுயற்சிகள் எடுத்துக் கொண்ட முன்னாள் அமைச்சர் திரு ஆர். வெங்கடராமனையும் நன்றியுடன் நினைக்க வேண்டும்.

தமிழ் மக்களும் தமிழக அரசியல் கட்சிகள் அனைத்தும் கண்ட கனவு நனவாகிவிட்டது. இனி அதன் முழுப் பயனையும் பெற்று, தொழில் வளர்ச்சிக்கு முயல்வோமாக!

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஸ்ரீமதி இந்திரா காந்தியின் புதிய காங்கிரஸ் கம்யூனிஸ்ட்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. எதிர்காலத்தில் அவர்களுடன் மேலும் நெருக்கமாகத் தொடர்பு கொள்ளும் பயங்கரமான ஏதுவும் உள்ளது. இப்படிப்பட்ட புதிய காங்கிரஸுடன் தமிழக அரசாங்கம் கூட்டுச் சேர்ந்துள்ளது. தமிழக அரசாங்கம் இவ்விதம் நேரடியாகவோ மறைமுகமாகவோ கம்யூனிஸச் செல்வாக்கு ஓங்குவதற்கு உதவி புரியலாகாது; அது ஜனநாயக சக்திகளின் வளர்ச்சிக்கு அநுசரணையாகவே செயலாற்ற வேண்டும்.

ஸ்ரீமதி இந்திரா காந்தியைக் 'கவிழ்த்து' விட்டால், அதன்பின் யார் பிரதமராக வருவார் என வினவுகிறார் திரு கருணாநிதி. இப்போதுள்ள பிரச்னை எவரையும் 'கவிழ்ப்பது' அல்ல. இந்திய சர்க்காரின் மீது கம்யூனிஸ சக்திகள் உறுதியான பிடிப்புப் பெறுவதை எப்படியும் தடுத்து நிறுத்தியாக வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காகத்தான் மத்தியில் ஒரு வலுவான ஜனநாயக முன்னணி ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறோம். இன்றைய பிரதமரை அகற்றிவிட்டால் போதுமா என்பதல்ல கேள்வி. அதன்பின் நடக்க வேண்டியதெல்லாம் ஜனநாயக முன்னணி எப்படி அமைக்கப்படுகிறது என்பதையும், எப்படிச் செயலாற்றுகிறது என்பதையும் பொறுத்தது. தேவையான போது, அழைப்பை ஏற்று, இந்திய சர்க்காரை நடத்தும் பிரதமராகப் பொறுப்பெடுத்துக் கொள்ளக்கூடிய ஒரு சிலர் நம் நாட்டில் நிச்சயமாக இருக்கிறார்கள்.

இவ்விஷயங்களில் நான் என்ன அபிப்பிராயப்பட்டாலும், என்னிடம் தொடர்ந்து மரியாதை காட்டப் போவதாகத் தமிழக முதல் மந்திரி உறுதி கூறியுள்ளார். இதற்கு நன்றி கூறுகிறேன். இதேபோல், நிலைமை மாறுவதை உத்தேசித்து அரசியலில் என்ன மாற்றங்கள் ஏற்பட்டாலும் திரு கருணாநிதிக்கும் அவரது கட்சிக்காரர்களுக்கும் எனது அன்பு நீடிக்கும் என்று உறுதி சொல்கிறேன்.

நான் தி. மு. க.வுக்குச் சொல்லவிரும்புவதெல்லாம் இதுதான்: ஆடுகளிடையே ஓநாய்கள் புகுந்து கலந்துள்ளன. இந்த ஓநாய்களுக்கு ஸ்ரீமதி இந்திரா காந்தி ஊக்கம் தந்து வருகிறார். அவரை ஆதரிப்பதன் மூலம் ஓநாய்களுக்கு உதவுவது நல்லதல்ல.

★

சர்க்காரிலும், தொழில் நிறுவனங்களிலும் அதிகாரங்களை ஓரிடத்தில் குவிப்பதையும், சிப்பந்திப் பட்டாளத்தைப் பெருக்கிக் கொண்டே போவதையும் எதிர்த்துப் போராடிப் புகழ் பெற்றவர் டாக்டர் ஸி. நார்த்கோட் பார்க்கின்ஸன். இவர் இந்தியாவுக்கு வந்து ஆறு இடங்களில் ஆறு உரைகள் நிகழ்த்தினார். இவை 'பார்க்கின்ஸன் சாராம்சம்' (The Essential Parkinson) என்ற பெயரில் புத்தகமாக வந்துள்ளது. பார்க்கின்ஸன் கூறுகிறார்:

> சோஷலிஸ பாணியில் சமுதாயத்தை அமைப்பதே பொருளாதாரக் கொள்கையின் இலட்சியமாக இருக்கவேண்டும் என்று ஐந்தாண்டுத் திட்டத்தில் கூறப்பட்டுள்ளது. உங்கள் (இந்திய நாட்டின்) நாடாளுமன்றத்தினர் 1954ல் இந்தக்கொள்கையை ஏற்றனர். அவர்கள் 1917ம் ஆண்டில் பிரிட்டிஷ் தொழிற் கட்சி கூறிய இலட்சியத்தைப் பின்பற்றியிருக்கிறார்கள். 1894ம் ஆண்டில் பீட்ரிஸும், ஸிட்னி வெப்பும் வகுத்த கொள்கைகளைத்தான் 1917ல் பிரிட்டிஷ் தொழிற் கட்சி ஏற்றது. 1848ல் முதன் முதலில் கார்ல் மார்க்ஸ் வெளியிட்ட கருத்தைத் தழுவியதே பீட்ரிஸ், ஸிட்னி வெப் கொள்கை. எனவே இந்தக் கொள்கை மிகப் பழைய, ஊசிப்போன கருத்தாகும். இந்த இருபதாம் நூற்றாண்டுக்கு உகந்த கொள்கைக்கு இந்தியா நிரத்துடன் முன்னடி எடுத்துத் தாவ வேண்டிய தருணம் வந்து விட்டது. இந்த நூற்றாண்டு முடியும்வரை இந்த அடி எடுத்து வைக்கத் தாமதிக்கலாகாது. **சோஷலிஸபாணி சமுதாயம் ஏற்பட வேண்டும் என்று மக்கள் விரும்பவில்லை. அவர்கள் தமக்குச் சௌகரியமான ஜாகை வசதியும், போதுமான உணவும், நல்ல ஊதியமும், எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கை கொள்ளக் கூடிய சூழ்நிலையையும்தான் விரும்புகிறார்கள்.** ஜப்பானில் நடப்பதுபோல் இந்த வசதிகளைத் தனியார் தொழில் மூலம் அளிக்கலாம்.

அல்லது சீனத்தில் நடப்பது போல் கம்யூனிஸச் சர்க்காரின் மூலம் அளிக்கலாம். ஆனால் இரண்டாவதாகச் சொன்ன வழியில் சுதந்திரத்தை இழக்க வேண்டும். இந்தியாவில் நான் பார்த்ததிலிருந்து ஒரு சுபிட்சமான சமுதாயத்தைச் சிருஷ்டிக்கக் கூடிய தொழிலூக்கமும், சக்தியும், தகுதியும் இருப்பதாக உறுதியாகக்கருதுகிறேன். இந்தியத் தொழிலதிபர்களுக்கு மட்டும் போதிய சுதந்திரம் அளிக்கப்பட்டால், அவர்களால் இந்நாட்டுக்குச் சுபிட்சம் ஏற்படுத்த முடியும். கூடவே அவர்களும் செல்வந்தர்களாயின் அதற்காக ஏன் ஆட்சேபிக்க வேண்டும்? மக்களுக்கு இன்றை விட நல்ல ஊதியமும், நல்ல வீட்டு வசதியும், உணவும், கல்வியும் கிடைக்குமாயின் தொழிலதிபர்கள் பணக்காரர்களாவதைப் பற்றி யார் பொருட்படுத்தப் போகிறார்கள்? எல்லா இடங்களிலும் சாமானிய மக்களுக்குச் சோஷலிஸ பாணியில் சலிப்பு ஏற்பட்டு விட்டது. பத்தாம்பசலி சோஷலிஸத்தை அவர்கள் விரும்பவில்லை. தங்களது அன்றாட வாழ்க்கையில் சுபிட்சத்தை பிரத்யக்ஷமாகக் காணவே அவர்கள் விரும்புகின்றனர்.

★

தனியாக ராஜ்யக் கொடி வேண்டும் என்ற தமிழக முதல்வரின் கோரிக்கைக்குப் பொதுவாகப் பலத்த கண்டனம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மற்ற ராஜ்ய முதன் மந்திரிகள் இதை ஆதரிக்கவில்லை. எனவே இதனை மௌனமாக விட்டுவிட வேண்டியதே.

தமிழக அரசாங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் நடந்த மாநில சுயாட்சி மகாநாடும் வலுவான கண்டனத்துக்கு ஆளாகியுள்ளது. தனித் தமிழ் நாட்டுக் கொள்கையுடன் தொடங்கப்பட்டது தி. மு. க. என்பது இச்சந்தர்ப்பத்தில் நினைவூட்டப்படுகிறது. ராணுவம், வெளிவிவகாரம், போக்குவரத்து இவை தவிர மற்ற எல்லா இனங்களிலும் ராஜ்யங்களுக்குச் சுயாட்சி உரிமை வேண்டும் என்பது மகாநாட்டின் கருத்து. பாகிஸ்தான் எப்படி உருவாகலாம் என்று நான் முன்பு கூறிய யோசனையை ஒத்தது இது. சூழ்நிலையைப் பொறுத்துப் பார்த்தால், ஒரு சமயத்தில் நல்லதாக இருப்பது பிரிதொரு சமயத்தில் தீயதாகி விடும். இன்று இந்தியாவில் சட்டமும், சமூக ஒழுங்கும் மிக அதிருப்திகரமாக உள்ளன. இந்த நெருக்கடி நிலைமையில் மத்திய சர்க்காரின் அதிகாரங்களையும் பொறுப்புக்களையும் குறைப்பது பற்றி எண்ணுவதற்கேயில்லை.

★

உலகில் உள்ள அணு ஆயுதம் அனைத்தையும், விஷக் கிருமிகளைப் பரப்பும் ஆயுதங்களையும் ஆழ்கடலில் எறிவதற்கு மிகத் தீவிரமான முயற்சி எடுத்தால் அதுவே ஐ. நா.வின் வெள்ளி விழாவுக்கு உகந்ததாக இருக்கும். அணு ஆயுதப் போர் முறையை அடியோடு தடுத்தால்தான் வல்லரசுகளின் வள வசதிகள் நல்ல நோக்கங்களுக்குப் பயனாக முடியும். இது கடினமான காரியம். சர்வதேச நாடுகளிடை புதிய நம்பிக்கையைத் தோற்றுவித்தாலே இது முடியும். ஆனாலும் கடினமான காரியங்களை மேற்கொள்வதுதான் பெருமை. தேவைகளுக்கு ஏற்ப மனிதன் தன் ஆன்மாவை உயர்த்திக் கொண்டால் எதுவுமே அசாத்தியமல்ல.

★

அரசியல்வாதிகள் அடுத்த தேர்தலைப்பற்றி எண்ணுகிறார்கள்; ராஜநீதி நிபுணர்களோ அடுத்த தலைமுறை பற்றி எண்ணுகிறார்கள் என ஓர் எழுத்தாளர் கூறியிருக்கிறார். கேரளத் தேர்தல் முடிவுகளை இந்தக் கோணத்தில் நோக்கும்போது, ஸ்ரீமதி இந்திரா காந்திக் கட்சிக்கும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையில் உள்ள தொடர்பு எதிர்காலத்தில் ஜனநாயகத்துக்கு நேர இருக்கும் ஆபத்தைக் காட்டும் அம்சமாகும். வளர்ந்துவரும் இந்த அபாயம் பற்றி ராஜநீதி வல்லுநர்கள் மிகுந்த கவலை கொள்ள வேண்டியது அவசியம்.

# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்திருந்தும், அதனால் நுண்ணிய கிருமிகளிடமிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்திலிருந்தும் பாதுகாப் பளிக்கிறது. ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோஃபீன்) கலந்த **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு... அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்—**

**துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.**

Interpub/GP/5 Tam

நான் இருபதாவது வயதை நெருங்கிக் கொண்டிருந்தேன் — அவளும் அப்படித்தான்.

என் அம்மா ஒரு விருந்து வைத்தாள். ஒரு கன்னிப் பெண் என்கிற முறையில் என் பெற்றோர்களுடன் சேர்ந்திருக்கும்போது வரும் கடைசிப் பிறந்தநாள் எனக்கு அதுவாகத் தான் இருக்கும். இதனால் அம்மாவுக்கு வருத்தம்தான். அதே சமயம் அந்தக் கடைசிப் பிறந்த நாளைப் பழி வாங்குவதுபோல் ஆடம்பரமான விருந்துக்கும் ஏற்பாடு செய்து விட்டாள்.

என்னுடைய நண்பர்களில் பெரும்பாலோரும் உறவினர்களும் ஏற்கனவே இங்கு வந்து குழுமிவிட்டனர். நாங்கள் எல்லோரும் மாடியில் இருந்தோம்.

எங்களுக்கு முன்னால் காலைச் சூரியன் சிவப்பும் மஞ்சளுமாய்க் கீழ்வானத்தில் காட்சி தந்தான்.

நாகரிக முன்னேற்றம் அடைந்த ஒரு பட்டணத்தின் இனம் பிரிக்க முடியாத ஓசைகள் கீழே சாலையிலிருந்து எழும்பத் தொடங்கி விட்டன. கார்களின் ஹாரன் ஒலி, ஸ்கூட்டர்களின் புருபுரு சத்தம், ஆஸ்துமா நோயாளிக்கு இழுப்பது போன்று பழைய சைக்கிள்களின் ஒலி, ரிக்‌ஷாக்காரர்களின் அதட்டல்கள் எல்லாம் கலந்து கேட்டன. எல்லாமே ஏதோ பைத்தியம் பிடித்து ஒன்றையொன்று துரத்துவது போல் விரைந்து கொண்டிருந்தன.

மாடியில் எங்களைச் சுற்றி விழாக் கோலாகலத்தின் வாசனை பரவ ஆரம்பித்துவிட்டது. அதற்குள் யாரோ, ''ஹாப்பி பர்த்டே டு யூ!'' என்று பாட ஆரம்பித்துவிட்டார்கள்.

என் பக்கத்தில் யாரோ திடீரென்று சத்தம் போட்டார்கள்: ''அந்தப் பெண்ணைப் பாரேன்! அவள் நடையைக் கவனி! எத்தனை ஒய்யாரம்!''

''ஆமாம்! அந்தப் பெண்ணை எங்கள் வீட்டுப் பக்கம் நேற்றுக் கூடப் பார்த்தேன். எதையோ பறி கொடுத்து விட்டவள்போல் காட்சி தந்தாள். கொஞ்சம் பைத்தியமோ என்று எனக்குத் தோன்றுகிறது.'' — இப்படி யாரோ பதில் சொன்னார்கள்.

# பிறந்த நாள்

கல்யாணசுந்தரி ஜகந்நாத்



பல தலைகள் ஜன்னல் வழியாகவும் வராந்தா முகப்பிலிருந்தும் எட்டிப் பார்த்தன.

உயரமான, ஒல்லியான, அழகான ஒரு பெண் சாலையில் மிகவும் நளினமாக நடந்து வருவதை நான் பார்த்தேன்.

''முன்பொருநாள் அவள் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தாள். ஆனால் அன்று அம்மாவுக்கு விரத நாளானபடியால் ரொம்பக் காரியமாயிருந்தாள். 'என்ன வேண்டும்?' என்று அதட்டுவது போல் அவள் கேட்கவே இந்தப் பெண் ஏதோ வேலையைப் பற்றி முணு முணுத்துவிட்டு மன்னிப்புக் கேட்குமுகமாக ஏதோ சொல்லி விட்டுப் போய்விட்டாள்.''

பூத் தொடுத்துக் கொண்டிருந்த ராதா இவ்விதம் சொன்னாள்.



'கல்கி' நேயர்களுக்கு ஏற்கெனவே அறிமுகமான சிறந்த தெலுங்கு எழுத்தாளர் ஸ்ரீமதி கல்யாணசுந்தரி ஜகந்நாத். மேற்கு கோதாவரியில் 1925ம் ஆண்டு ஜூன் 23ந் தேதி பிறந்த இவர் ஆறு நாவல்களுக்குமேல் எழுதியுள்ளார். குறிப்பாகச் சிறுகதைத் துறையில் நல்ல புகழ் ஈட்டியுள்ள இவரது பல சிறுகதைகள் தமிழ், கன்னடம் ஆகிய மொழிகளில் வெளி வந்துள்ளன. 'பிறந்த நாள்' உள்ளத்தைச் சிலிர்க்க வைக்கும் ஓர் அற்புதக் கதை.

''எங்கள் வீட்டுக்குக்கூட அவள் வந்திருந்தாள். என் அண்ணாவின் காரியாலயத்தில் அவள் வீட்டு விலாசம் விசாரித்திருக்கிறாள். ஆனால் என் மன்னி இருக்கிறாளே, அவள் ரொம்பக் கறாரப் பேர்வழி. அவள் சொல்லுகிறாள், இப்படி ஒட்டுதல் இல்லாத பெண்கள், குடும்பத் தொடர்பு இல்லாத பெண்கள் பொதுவாகத் துணிச்சல்காரிகளாகத்தான் இருப்பார்கள் என்று. மன்னி அவளை அனுப்பி விட்டாள். அவள் அலட்டிக் கொண்டதைப் பார்க்க வேண்டுமே!'' இவ்விதம் இன்னொருத்தி சொன்னாள்.

''அவள் ஏன் வேலைக்குப் போகக்கூடாது? எதற்காக இப்படித் திரியணும்?'' என்று சுசீலா கேட்டாள். சமூக சேவைக் குழுவுக்கு அவள்தான் தலைவி. பேலாவில் சந்தனம் கரைத்துக் கொண்டிருந்தாள் அவள்.

''இந்த வகைப் பெண்கள் வேலை செய்ய மாட்டார்கள்'' என்றான் குமார், எதையோ மிகுந்த ஆவலுடன் எதிர்பார்க்கும் தொனியில்.

ஓவியன் மது, ஒருவித அலட்சிய பாவத்துடன் அவளை நோக்கியபடியே ''தொங்கும் படுதா'' என்றான்.

குமார் மேலும் கூறினான்: ''அவள் எப்போதுமே இப்படித்தான். புடவைத் தலைப்பு தோள்மீது படிந்து கீழே ஸ்டைலாகத் தொங்கும் விதமாகத்தான் அணிந்து கொள்வாள். ஏதோ ராணி என்கிற நினைப்பு!''

''இதைக் கேட்டீர்களா? இந்தப் பயல் இவளைப் பின்தொடர்வதையே தன் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருக்கிறான். அதனால்தான் இவனுக்கு இவள் எப்போதுமே ரொம்ப 'அல்டாப்'பாகத்தான் அலங்காரம் பண்ணிக் கொள்வாள் என்பது தெரிந்திருக்கிறது'' என்றான் பிரபாகர் கண் சிமிட்டி.

அவனுடைய சகோதரி ஷர்மிளா பட்டி மன்றத்தில் கலந்து கொண்டாள். ஒரு ரோஜாவை முகர்ந்தபடியே வெளியே தெருவை நோக்கியவாறு அவள் சொன்னாள்: ''அது உண்மைதான் பிரபு. அவள் பல தெருக்களில் நடந்து போவதை நான் பார்த்திருக்கிறேன். எப்போதுமே அவள் இப்படித்தான் தன்னைத் தாறுமாறாக அலங்கரித்துக் கொள்கிறாள்.''

''அவசரப்பட்டு எதையும் சொல்லாதே, அக்கா! அவள் மட்டாக உடை அணிகிறாள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் படுதாபோல் புடவையை இப்படித் தொங்க விட்டுக் கொண்டால் காரியாலயத்துக்குப் போய்க் காரியங்களைச் செய்யத் தடங்கலாகத்தான் இருக்கும்'' என்று பிரபாகர் கூறினான்.

சமூக சேவகி குறுக்கே புகுந்து, ''அவளுக்குச் சுத்தமாக இருக்கவே தெரியாது போலிருக்கிறது. பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது'' என்றாள் கணீரென்ற குரலில்.

''எங்கே, நான் அவளைப் பார்க்கட்டும்!'' இதுவரை சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த திவ்யப் பிரபா எழுந்து வந்தாள். ஓவியம் வரைபவள் அவள். பாதி தின்று முடித்திருந்த இனிப்புப்பட்சணத்தைக் கையில் பிடித்துக் கொண்டே வெளியே எட்டிப் பார்த்தாள். ''படம் எழுதினாற் போல் அழகாகத்தான் இருக்கிறாள். நிறப் பொருத்தம்தான் எவ்வளவு நன்றாக இருக்கிறது! பின்னால் சூரியக் கிரணங்களின் ஒளி வேறு!'' என்று ஏதோ யோசித்தவாறே பேசினாள் அவள்.

''இதைக் கேளு! அன்றொரு நாள் இவள் முகத்தில் வியர்வை வழியக் கடுமையான வெய்யிலில் நடந்து போய்க் கொண்டிருந்தாள். பரிதாபப்பட்டு அவளைக் காரில் ஏற்றிக் கொண்டு போவதாகச் சொன்னேன். ஆனால் அவள் முகத்திலடித்தாற்போல் 'வேண்டாம்' என்று சொன்னது மட்டுமல்ல; என்னை ஏதோ ஒரு குப்பைக் குவியலைப் பார்ப்பது போல் நோக்கினாள். நான் ஜோஸியம் சொல்கிறேன். இந்தப் பெண்ணுக்கு நல்ல காலம் பிறக்கப்போவதில்லை. இம்மாதிரியானவர்களின் கதி சாதாரணமாக ஏதாவது சினிமா 'எக்ஸ்ட்ரா'வாகவோ அல்லது வேறு ஏதாவதாகவோ விளங்குவதில்தான் போய் முடியும்.'' சுசீலாவின் அத்தான் கிருஷ்ணன் ஏதோ ரொம்பத் தெரிந்தவன் மாதிரி தலையை ஆட்டிக் கொண்டே பேசினான். கண்களை இடுக்கி முன்னேறி வருகிறவளைப் பார்த்தான்.

''அவளைக் கவனித்துக் கொள்ளக்கூடியவர்கள் யாருமே இல்லையென்று நினைக்கிறேன், பாவம்!'' என்றாள் திவ்யப் பிரபா.

இதுவரையில் மௌனமாக இருந்த சூரியராவ், ''ஆமாம்! அது உண்மைதான். அவள் தன் படிப்பைக்கூடப் பாதியில் நிறுத்திவிடும்

படியாகி விட்டது'' என்று நிச்சயமாகத் தெரிந்தவன்போல் கூறினன்.

''இதைக் கேளுங்கள்!'' என்று சொல்லிப் பிரபாகர் சிரித்தான். ''இந்த விவரங்களை யெல்லாம் எப்போது தெரிந்து கொண்டாய், தம்பி?''

''கோரமாகப் பேசாதே!'' என்று அவன் அக்கா கடிந்து கொண்டாள்.

''உன் அப்பாவையே தன் ஆபீஸில் இவனுக்கு ஒரு வேலை போட்டுக்கொடுக்கச் சொல்கிறதுதானே?'' என்று திவ்வியப் பிரபா கேட்டாள், என்னைப் பார்த்து. அவள் தன் வாயில் இனிப்புப் பண்டத் துண்டங்களைப் போட்டுச் சுவைத்துக் கொண்டிருந்தாள். ''உன் அப்பாவால் இதைச் செய்ய முடியுமே?'' என்றாள் மீண்டும்.

''அது அருமையான யோசனைதான்'' என்றாள் ஸைராபானு தனக்குத் தானே பன்னீர் தெளித்துக் கொண்டு.

நான் நாற்காலியை விட்டு எழுந்தேன். தொடுப்பதற்காக மடியில் வைத்திருந்த உதிரிப் புஷ்பங்களைக் கீழே எறிந்தேன். இந்தப் பேச்சை யெல்லாம் மேலும் செவிமடுக்கச் சக்தியின்றிப் படிகளில் விரைந்து இறங்கினேன்.

''எதற்கும் உன் அப்பாவைக் கேட்டுப் பாரேன்!'' என்று பிரபாகர் எனக்குப் பின்னால் என் காதுபடக் கூவினன்.

நான் படிகளில் இறங்கிப் போய்க்கொண்டிருக்கும்போது அவள் என் வீட்டைக் கடந்து செல்வதானது வாசல் கதவு வழியே தெரிந்தது. அவள் என்னைப் பார்த்தாள்; நின்று புன்னகை புரிந்தாள். அவள் கண்கள் களங்கமற்றவையாக நம்பிக்கை வைப்பவையாகத் தோன்றின. நான் பதிலுக்குப் புன்னகை புரிந்து அவளை உள்ளே வருமாறு சைகை காட்டினேன். அவள் உடனே வந்தாள்.

சூரிய ஒளியின் முன்னே அவள் புடவை செம்பொன் நிற ஒளியை, அவளுக்காக நான் காத்திருந்த அந்தத் தாழ்வாரத்தில் பரப்பியது.

''எனக்கு இந்தப் புடவை ரொம்பப் பிடித்திருக்கிறது'' என்று கபடமில்லாமல் பாராட்டிச் சொன்னேன்.

அவள் தயங்காது புன்னகை செய்தாள். ''ஆமாம், எனக்கும்தான்'' என்றாள். ''அழகானதொரு சூரியாஸ்தமனத்தைப் பார்ப்பது போலிருக்கிறது இது.''

''நம் இருவருக்கும் ஒரே மாதிரியான ரசனை இருக்கிறதே! இதை எங்கே வாங்கினாய்?'' என்று கேட்டேன்.

''என் அம்மா சென்ற தடவை என் பிறந்த நாளுக்கு வாங்கிக் கொடுத்தாள்.''

''ரொம்ப நன்றாகத் தேர்ந்தெடுத்திருக்கிறாளே!'' என்றேன். ''உன் வளையல்கள் கூட அழகாக இருக்கின்றன. புடைவைக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றன தெரியுமா?''

''ரொம்ப மலிவு; இப்போதுதான் வாங்கினேன். புடைவைப் பொருத்தம் இல்லாது போனாலும் இவை அழகானவைதாம்'' என்றாள் அவள் சிரித்துக் கொண்டே.

இந்தப் பெண்ணையா கருணையின்றி அல்டாப்புக்காரி என்றும் கர்வக்காரி என்றும் பழித்தார்கள்! நாங்கள் அமர்ந்தோம்.

மாடியில் விழாக் கோலாகலத்தில் ஈடுபட்டிருந்த கூட்டத்திலிருந்து சிரிப்பும் பாட்டும் கிளம்பிக் கீழே மிதந்து வந்தன.

நெருப்பு நிறத்தில் அவள் கரங்களில் இருந்த வளையல்களையே நான் இன்னமும் பார்த்துக் கொண்டிருந்தேன். எங்களுடைய (அவளுடைய — என்னுடைய) முன்னோடியான ஆதிகாலத்துப் பெண் ஈவாள், சென்று மறைந்து போன அந்த மங்கிய கடந்த காலத்தில் தன்னை அலங்கரித்துக் கொள்வதற்காகக் கடற்கரையில் கிளிஞ்சல்களைப் பொறுக்கினாளே, அவள் — என் கண்களின் வழியே இப்போது எட்டிப் பார்த்தாள். எனக்குப் பயிற்றுவிக்கப்பட்ட பண்பாடெல்லாம் மறைந்து போயிற்று. அவளுடைய அழகிய வளையல்களையே நான் அகன்று விரிந்த கண்களால் அபரிமிதமான களிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''எனக்கும் இவை ரொம்பப் பிடித்திருக்கின்றன'' என்றான் அவள் நீண்ட நாட்கள் பழகிய ஒருத்தி நம்பிக்கையுடன் பேசுவது போல. எங்களிடையே எவ்வித தயக்கமும் இல்லை. சகோதரிகள் போலிருந்தோம்.

சிந்தனை சிறிதுமின்றிச் சட்டென்று மனம் உந்த ஒரு முடிவுக்கு வந்தவளாய் அவள் தன் கரத்தை என் பக்கம் நீட்டினாள். செம்பொன் நிறத்தில் அரை டஜன் வளையல்கள் அவள் விரல்களில் தொங்கிக்கொண்டிருந்தன. பிறிதொரு சமயம் பயன்படும் என்பதால் அவற்றைப் போட்டுக் கொள்ளாமல் தனியே வைத்திருந்தாள் போலும். அவள் முன்பின் தெரியாதவள்தான்; எனினும் இப்படிச் சிறிதும் தயக்கமின்றியும் நயமாகவும் ஒரு பொருளை இன்னொருவருக்குக் கொடுத்து விடத் தயாராயிருக்கும் அந்தப் பெண்ணிடம் எனக்கு நன்றி உணர்ச்சி ஏற்படுவதைத் தவிர்க்க முடியவில்லை. வளையல்களைப் பற்றிக் கொண்டபோது அன்பும் நன்றியும் மிளிர நான் மென்னகை புரிந்தேன். ''ரொம்ப நன்றி'' என்று வளையல்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சொன்னேன். ''ஒரு வஸ்து அழகாகவோ உபயோகமுள்ளதாகவோ இருந்துவிட்டால், பிறகு அதன் விலை முக்கியத்துவத்தை இழந்து விடுகிறது!''

அவள் இதை உடனே ஒப்புக்கொண்டாள். புன்சிரிப்புடன் ''நானும் அப்படித்தான் நினைக்கிறேன்'' என்றாள்.

சந்தோஷத்தில் முகம் பிரகாசிக்க, ''எல்லாரையும் விட்டு விட்டு இவற்றை என்னிடம் ஏன் தருகிறாய்?'' என்று நான் கேட்டேன்.

''உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. அதனால்தான். எனக்குப் பிடிக்காத மனிதர்களானால் நான் பேசவே மாட்டேன். என் சுபாவமே அப்படி'' என்று கூறியவள் என் முகத்தைத் தீவிரமாக ஆராய்ந்தாள்.

''ஆண்டவன் இருக்கிறான்! நீ நல்ல வேலையில் அமர்வாய் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது'' என்று கூறத் துணிந்தேன் நான். அதே சமயம் அப்பாவிடம் எந்த விதமாக இவள் விஷயத்தை எடுத்துச் சொன்னால் நல்லபடியாக முடியும்? என்று யோசித்துக்கொண்டிருந்தேன்.

அவள் எழுந்தாள். ''ஆமாம். நான் இன்னும் கடவுளிடமும் நல்ல மனங்களிடமும் நம்பிக்கை இழக்கவில்லை'' என்றாள்.

''எந்தவிதமான வேலை கிடைத்தாலும் சரி என்று ஏற்றுக்கொள்'' என்று நான் நல்ல எண்ணத்துடன் சொன்னேன்.

''இல்லை, அது என்னால் முடியாது. ஒப்புக்கொள்ளு முன்னர் அது எப்படிப்பட்ட வேலை என்பது எனக்கு முதலில் தெரிய வேண்டும். எனக்குத் தகுந்த வேலை என்றால் நிச்சயம் ஒப்புக் கொள்வேன். எல்லாம் எந்த அடிப்படையில் என்றால்...''

''இல்லை, இல்லை. ஆரம்பத்தில் நீ ரொம்ப மீனமேஷம் பார்க்கக் கூடாது'' என்று நான் நாசூக்காகத் தொடங்கினேன். ''உன் வீட்டில் சாப்பாட்டுக்கு வழி செய்ய வேறு யாருமே இல்லை போலிருக்கிறதே?'' என்று கவலையோடு கேட்டேன்.

''என் அம்மாவைத் தவிர எனக்கு வேறு யாரும் கிடையாது. அவளும் இப்போது பக்கவாத நோயினால் படுத்த படுக்கையாயிருக்கிறாள்.'' அவள் விசனம் அடங்கிய குரலில் கூறினாள்.

''அடடா! ரொம்பக் கஷ்டம்தான்!'' என்று ரகசியம் பேசுவதுபோல் சொன்னேன். என் இதயம் அவளுக்காக உருகியது.

திடும்மென்று அவள் என் கடிகாரத்தை நேரம் என்ன என்று அறியப் பார்த்தாள். ''எனக்கு இரண்டு ரூபாய் கடன் தர முடியுமா?'' என்று கேட்டாள். குரலில் அவசரம் தொனித்தது. ''நான் யாரையும் கேட்பதில்லை; கேட்டதுமில்லை.''

''ஆனந்தமாய்த் தருகிறேனே'' என்று பதில் சொன்னேன். அவளுக்குத் தேவையானது எதுவானாலும் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.

ஆனால் அடுத்த விநாடியே என்னுடைய நாகரிக அறிவு என் நல்லெண்ணத்தைக் குருடாக்கியது. அவள் என்னிடம் நம்பிக்கை வைக்கக் காரணமாயிருந்த அதே பகுத்தறிவுதான் இந்தக் காரியத்தையும் செய்தது. இந்தச் சந்திப்பும் பேட்டியும் எல்லாமே, ஏதோ கனவுபோல் தோன்றின. எங்கிருந்தோ வருகிறாள் ஒரு பெண். ரொம்ப நல்லவளாகவும் அன்பு மிகுந்தவளாகவும் விளங்குகிறாள். எதுவானாலும் சரி என்று கிடைக்கிற முதல் வேலையை ஏற்க அவள் தயாராக இல்லை. முன் பின் தெரியாத ஒருத்தியிடம் அவள் கடன் கேட்கிறாள்.

ரகசியக் குரலில் அல்ல; அதைவிடச் சற்று உரக்கவே நான் வருத்தத்துடன் பேசினேன்: ''பாவம்! இவளுக்கு நிஜமாகவே பைத்தியம் தான்!''

நான் அவளைப் புண்படுத்தி விட்டேன். ரொம்ப ஆழமாகப் படுகாயப்படுத்திவிட்டேன். விருட்டுப் போதில் அவள் கண்கள் நிறம் மாறின; ரத்தம் அவளது வெண்மையான கன்னங்களுக்குப் பாய்ந்தது. அவளுடைய மெல்லிய நாசிகள் கண்ணுக்கு எளிதில் புலப்படாத அளவில் நடுங்கின.

கடந்துபோன விநாடியை இல்லையென்று ஆக்கிவிட முடியுமா? காலங் கடந்து வருந்திப் பயன் என்ன? எனக்கு அனுபவம் போதாது. மனித குலத்தின் சோகச் சிக்கல்கள் பற்றி எனக்கு அப்போதெல்லாம் ஒன்றும்தெரியாது.

''எனக்குப் பைத்தியம் இல்லை சகோதரி!'' குபுக்கென்று அவள் ஓர் அவசரத்துடன் கூறினாள். ''எனக்குப் பணம் அவசியம் தேவைப்படுகிறது என்பதால்தான் கேட்டேன். இன்று எனது இருபதாவது பிறந்த நாள். என் அம்மா அதைக் கொண்டாடி என்னை ஆசிர்வதிக்க விரும்புகிறாள். என்னுடைய அடுத்த பிறந்த நாளின்போது தான் உயிருடன் இருக்கப் போவதில்லை என்று உணர்ந்திருக்கிறாள் அவள்!'' ஆரம்ப நாட்களில் அவள் நல்லதொரு கல்விக்கூடத்தில் பயின்றிருக்கிறாள் என்பதை அவளுடைய சோகத் துவனிகள் காண்பித்தன.

இலேசான காற்று தோட்டத்தின் மலர்ச் செடிகள் மீதாக வீசியது; பின்னர் உள்ளே வந்தது — சில்லென்று இருந்தது. அவளுடைய தோளிலிருந்து தொங்கிய புடவைத் தலைப்பு

மெல்லிய பூங்காற்றில் படபடத்தது. பாங்காய்த் தொங்கும் புடவைத் தலைப்பை அவள் நழுவவிடாது சட்டென்று பற்றித் தோள் மீது மீண்டும் கொண்டு சென்று இறுத்தினள். இலேசாக என் பக்கம் திரும்பினள்.

ஆனல் அதற்குள் நான் கவனித்து விட்டேன். புடவைத் தலைப்பின் கீழே கை இல்லை. வெட்டப்பட்ட கையின் மேற் பகுதி மட்டுந்தான் இருந்தது.

இதற்குள் அவள் தலைப்பைச் சரி செய்து கொண்டு விட்டாள். பட்டு மீண்டும் நளினமான நிறத்தில் தொய்ந்து தொங்கியது.

''நான் வித்தை செய்யும்போது கீழே விழுந்து பலமாக அடிபட்டுக் கொண்டேன். கையை வெட்டி எடுத்து விட்டார்கள். சர்க்கஸ் வேறு ஊருக்கு நகர்ந்து விட்டது.'' மனம் நொந்து உறைந்துபோன குரலில் பேசினள்.

குதிகாலைத் தரையில் அழுத்தித் திரும்பினள், வெளியேறிவிட்டாள். செம்பொன் நிறப் புடைவை சூரிய கிரணங்களுக்கு எதிரே ஒளி அலைகளை வீசியது.

எனக்குச் சுய நினைவு திரும்பியதும் கையில் கண்ணாடி வளையல்களுடன் அவளைத் தொடர்ந்து ஓடினேன். அவளைத் தேடினேன். எங்குமே அவள் வந்து போனதற்கான சுவடுகளைக்கூடக் காண முடியவில்லை.

பல மணி நேரத்துக்குப் பிறகு, சத்தம் போடுகிறவர்களும், பாடுகிறவர்களும் சந்தோஷம் மிக்கவர்களுமான நண்பர்களுக்கு மத்தியில் என் தாயார் எனக்கு நெற்றியில் திலகமிட்டாள். உள்ளுக்குள்ளே என் இதயம் கனத்தது. வெள்ளித் தட்டில் சூடம் ஏற்றி அதை என் கண்களுக்கு எதிரே என்னை ஆசிர்வதிக்கக் கொணர்ந்தாள்.

தட்டில் தீப ஒளி செம்பொன் நிறத்தில் உயர்ந்தது. ஆனல் என் கண்களின் பார்வையைச் செம்பொன் நிற ஒளியைப் பரப்பிய படியே எட்ட எட்டப் போய்க்கொண்டிருக்கும் அவளது புடைவைத் தலைப்பு முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

காலம் சென்றது. இப்போது நான் குழந்தைகளின் தாயார். எனக்கென்று ஓர் இல்லம். செம்பொன் நிறத்தில் இருக்கும் அந்தக் கண்ணாடி வளையல்களைப் பிதிரார்ஜித நகைகள் அடங்கிய சிறிய தந்தப் பெட்டியில் வைத்திருக்கிறேன்.

என்றாவது ஒரு நாள் என் குழந்தைகள் அதைத் திறந்து பார்ப்பார்கள். எதற்காக இந்த விலை மலிவான அழகிய கண்ணாடி வளையல்களைக் குடும்பத்தின் முன்னேர்களான பெண்மணிகள் அணிந்திருந்த கனமான தங்க ஆபரணங்களுடன் சேர்த்து வைத்துப் பாதுகாக்க வேண்டும் என்று அவர்கள் அதிசயப்படுவார்கள். என்னிடம் அவற்றுடன் சேர்ந்து சடுதியில் வந்த இயல்பான அன்பை அவர்களால் உணரவே முடியாது. துயரம், பெருமை, தைரியம், அன்பு — இவற்றைக் காட்டிலும் அதிகமாக என் யோசனையின்மை ஆகியவையெல்லாம் அந்த மலிவான வளையல்களைச் சுற்றிச் சூழ்ந்திருப்பதை அவர்கள் அறிய மாட்டார்கள்.

எனக்கு எத்தனையோ பிறந்த நாட்கள் வந்து போயின. ஆனல் அத்தகைய நாட்கள் ஒன்றிலேனும் செம்பொன் நிற ஜ்வாலையுடன் சூடம் ஏற்றப்படவில்லை. ஆனல் ஒவ்வோர் ஆண்டும் என் பிறந்த நாள் விடியும்போது நம்பிக்கை வைத்து அன்பு செலுத்தும் அந்தப் பெண்ணின் முகம் — இன்னரென்று தெரியாத அந்தப் பெண்ணின் கம்பீரமான, எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடிய, துயரம் தேங்கிய அந்த முகம் — என் கண்களின் முன்னே மிதக்கிறது. என்னை ஆட்கொண்டு விடுகிறது. பற்பல ஆண்டுகள் ஆகியும் மங்காது மழுங்காது துளைக்கிறது துயரம்.

அவள் இப்போது எங்கே இருக்கிறள்?

—ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: **குமரன்**

## அபூர்வ ஆலயத்துக்கு அள்ளித் தாருங்கள்!

வைதிக வழிபாட்டில் காயத்ரி உபாசனை முதலிடம் பெறுகிறது. பேராற்றல் பொருந்திய காயத்ரி மந்திரம் மூன்று வேதங்களுக்கும் சாரமானது. சூரியனுக்கும் ஒளி கொடுக்கும் பராசக்தியை உலகுக்கெல்லாம் ஞான ஒளி தருமாறு வேண்டும் மந்திரம் அது. இவ்வாறு மந்திர ஜபத்தில் முதலிடம் பெற்றிருப்பினும் காயத்ரி தேவிக்குக் கோயிலும் ஆலய வழிபாடும் காணப்படவில்லை. இந்தக் குறையை நீக்குவதேபோல் பூலோக கைலாசமாகிய சிதம்பர க்ஷேத்திரத்தில், ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் ஆலயத்துக்கு வடமேற்குத் திசையில் காயத்ரியம்மன் வீதியில், ஸ்ரீ காயத்ரி தேவிக்கு ஓர் ஆலயம் உள்ளது. இவ்வாலயம் புராதனப் புகழ் கொண்டதாகத் தெரிகிறது. மிக அபூர்வமான இக் கோயிலின் கர்ப்பக் கிருஹம், மகா மண்டபம், ராஜகோபுரம், விமானம், திருக்குளம் முதலியவற்றை ஜீர்ணோத்தாரணம் செய்து குடமுழுக்கு நிகழ்த்த உத்தேசிக்கப் பட்டிருக்கிறது. இத்திருப்பணிக்கு இரண்டு லட்ச ரூபாய் செலவாகுமென மதிப்பிட்டிருக்கிறர்கள். இவ்வரிய பணி நிறைவு பெற அன்பர்கள் அடியிற் காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பவேணும்: ஸ்ரீ கே. வெங்கடேசய்யர், ஸ்ரீ காயத்ரி அம்மன் கோயில் பரம்பரை டிரஸ்டி, 23, குருவையர் அக்ரகாரம், சிதம்பரம்.



# எழுக! எழுக! எழுகவே!

எழுக இனிய பாரதம்
அழிக பேத உணர்வுகள்
தொழுக காந்தி கொள்கையைத்
தொடர்ந்து மக்கள் வாழவே! - எழுக!

ஒன்றி விட்ட பாரதம்
ஒன்றி யென்றும் வாழ்ந்திடும்
அன்றி வேறு நிலைவரின்
அதைப் பொறுத்து வாழ்ந்திடோம்
- எழுக!

வகுப்பு வாத சக்திகள்
வலையி லென்றும் சிக்கிடோம்
பகுத்து வாழும் வர்க்கமாம்
பாகு பா(டு)அ கற்றுவோம் - எழுக!

பதவிச் சண்டைப் பூசல்கள்
பாரதத்தில் மிக்குள
தகுதி பெற்ற தலைவரைத்
தரம் பிரித்துப் போற்றுவோம் - எழுக!

அறிவின் மிக்க தலைவர்கள்
அனுபவத்தின் மேதைகள்
பதவியேற்றுப் பணிகளாற்றும்
பண்பை உருவாக்குவோம் - எழுக!

கல்வி கற்கும் இளைஞர்கள்
கட்சி சேரும் நிலையதை
விட்டொழிக்கச் செய்குவோம்
விதிமுறை உண்டாக்குவோம் - எழுக!

அராஜகத்தின் மூலமாய்
ஆட்சி செய்ய எண்ணிடும்
இராட்சசப் பிண்டங்களைக்
காட்சிப் பொருளாக்குவோம் - எழுக!

இமயம் குமரி நமதுமண்
இதுவே நமது இனியபண்
எழில் கொழித்து வளமைசேர்த்து
இன்ப நாடாய் ஆக்குவோம் - எழுக!

ஆ. கிருஷ்ணன்

சாமா



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் இருபத்துநான்கு

## இளவரசியின் அவசரம்

இளவரசிகளை உபசரித்து வரவேற்றுப் பீடங்களில் உட்காரச் செய்த பிறகு அநிருத்தர் தாமும் அமர்ந்தார்.

''தேவி! என்னைப் பார்க்க வேணுமென்று சொல்லி அனுப்பினால் நானே வந்திருக்க மாட்டேனா? இவ்வளவு அவசரமாக வந்த காரணம் என்ன? சக்கரவர்த்தி சௌக்கியமாயிருக்கிறார் அல்லவா?'' என்று கேட்டார்.

''சக்கரவர்த்தியின் தேக சுகம் எப்போதும் போலிருக்கிறது, ஐயா! ஆனால் மனசுதான் கொஞ்சம் சரியாக இல்லை. நேற்று இரவு அடித்த கடும் புயல் தந்தையின் மனத்தை ரொம்பவும் பாதித்திருக்கிறது. இராத்திரியெல்லாம் அவர் தூங்கவில்லை. குடிசைகளில் வாழும் ஏழை எளிய மக்கள் என்ன கஷ்டப் பட்டிருப்பார்கள் என்பதை எண்ணி அடிக்கடி புலம்பினார். பொழுது விடிந்தவுடன் தங்களைப் போய்ப் பார்க்கும்படி சொன்னார். புயலினால் கஷ்ட நஷ்டம் அடைந்தவர்களுக்கெல்லாம் உடனே உதவி அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமாம். அதைத் தங்களிடம் சொல்லுவதற்காகவே முக்கியமாக வந்தேன்!'' என்றாள் இளையபிராட்டி குந்தவை.

''தேவி! இந்த எளியவனால் என்ன செய்ய முடியும்? முதன் மந்திரி என்ற பெயர்தான் எனக்கு என்பது தங்களுக்குத் தெரியாதா? பெரிய பழுவேட்டரையர் இந்தச் சமயம் ஊரை விட்டுப் போயிருக்கிறார். பொக்கிஷத்தை இறுக்கிப் பூட்டிக் கொண்டுதான் போயிருப்பார். அவருடைய சம்மதமின்றிக் காலாந்தக கண்டரால்கூடப் பொக்கிஷசாலையைத் திறக்க முடியாதே! கஷ்ட நஷ்டங்களை அடைந்தவர்களுக்கு நான் என்ன உதவி செய்ய முடியும்? வாசலில் பலர் வந்து காத்திருப்பதைத் தாங்கள் பார்த்திருப்பீர்கள். ஆனால் அவர்களைப் பார்ப்பதற்கே எனக்கு வெட்கமாயிருக்கிறது. அதனால்தான் வெளியில் செல்வதற்கே தயங்கிக் கொண்டிருக்கிறேன்'' என்று அநிருத்தப் பிரம்மராயர் பஞ்சப் பாட்டுப் பாடினார்.

''ஐயா! அதைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். என்னுடைய சொந்த உடைமைகள் அனைத்தையும் கொடுக்கிறேன். என் அன்னையும் அவ்விதமே கொடுக்கச் சித்தமாயிருக்-

கிறார்கள். சக்கரவர்த்தியின் அரண்மனையில் உள்ள எல்லாப் பொருள்களையும் தாங்கள் எடுத்துக் கொள்ளலாம். தந்தை அவ்விதம் சொல்லி அனுப்பினார்கள். ஏழைகளின் கஷ்டங்களுக்குத் தாற்காலிக சாந்தியாகவேனும் ஏதேனும் ஏற்பாடு செய்யுங்கள்....''

''தங்களுடைய சொந்த உடைமைகள் யானைப் படைக்குச் சோளப் பொரி கொடுத்ததாகவே இருக்கும். சோழ நாடு முழுவதும் நேற்றுப் புயல் அடித்திருக்கிறது. எங்கெங்கே என்னென்ன நேர்ந்திருக்கிறது என்ற செய்திகளே இன்னும் கிட்டவில்லை. இதோ நிற்கிறானே, என் பரமானந்த சீடன், இவன் பெரும் பயங்கரமான செய்தியைச் சொல்லுகிறான். கடல் பொங்கி எழுந்து கோடிக்கரை முதல் நாகைப் பட்டினம் வரையில் கடலோரமுள்ள ஊர்களையெல்லாம் மூழ்கடித்துவிட்டதாம்........!''

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அங்கிருந்த மூன்று பெண்களின் முகங்களும் பீதிகரமான மாறுதலை அடைந்ததை அநிருத்தர் கவனித்தார். உடனே அவர் தொடர்ந்து ஆறுதலாகக்கூறினார்:

''ஆனால் அதை நான் நம்பவில்லை. இவன் கூறுவது வெறும் வதந்திதான். புயலைக் காட்டிலும் வேகமாக வதந்தி பரவியிருக்கிறது. கடற்கரைப் பகுதியிலிருந்து செய்தி வருவதற்கே இன்னும் நேரமாகவில்லை. குதிரை மீது தூதர்கள் வந்தாலும் இன்று மத்தியானத்துக்கு மேலேதான் இங்கு வந்து சேர முடியும். இதற்கிடையில் நம்மால் செய்யக்கூடிய உதவிகளையெல்லாம் செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம்.''

இளைய பிராட்டி குந்தவை தன் மனக் குழப்பத்தைச் சிறிது சமாளித்துக் கொண்டு, ''ஐயா! நாகைப்பட்டினம் பற்றிய வதந்தி என் காதிலும் விழுந்தது. அதைப் பற்றியும் தங்களிடம் பேசலாம் என்று வந்தேன். இப்போது தானே சூடாமணி விஹாரத்துக்கு நாம் நிவந்தங்கள் அளித்து விட்டு வந்தோம்? விஹாரத்துக்கு ஆபத்து நேர்ந்தால், பாவம், அதில் உள்ள பிக்ஷுக்கள் என்ன செய்வார்கள்?'' என்று கூறிவிட்டு, பூங்குழலி நின்ற இடத்தை நோக்கினாள்.

''ஐயா! இந்தப் பெண் இங்கே எப்படி வந்தாள்? கோடிக்கரைத் தியாகவிடங்கரின் மகள் பூங்குழலி அல்லவா இவள்?'' என்று வினவினாள்.

''ஆமாம்; தியாக விடங்கரின் குமாரி தான். ஆனால் அவரைப் போல் சாதுவல்ல. ரொம்பப் பொல்லாத பெண். தனக்குச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுத் தொந்தரவு விளைவிப்பவள்!'' என்றார் முதன் மந்திரி.

இளைய பிராட்டிக்கு வேறுவித ஐயப்பாடு தோன்றியது. அருள்மொழியைப் பற்றி உளவு அறிவதற்காகத்தான் பூங்குழலியை இங்கே அநிருத்தர் தருவித்திருக்கிறாரோ? தந்திர வித்தைகளில் கைதேர்ந்த மந்திரியாயிற்றே? எப்படியிருந்தாலும் பூங்குழலியின் சார்பில் தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, ''அப்படியொன்றுமில்லையே? பூங்குழலி மிக நல்ல பெண் ஆயிற்றே! இங்கே, வா, அம்மா! முதன் மந்திரி ஏன் உன் பேரில் கோபமாயிருக்கிறார்? அவருக்கு ஏதேனும் தொந்தரவு கொடுத்தாயா?'' என்றாள்.



பூங்குழலி சற்று நெருங்கி வந்து, ''தேவி! முதன் மந்திரியையே தாங்கள் கேளுங்கள்! நான் முதன் மந்திரிக்குத் தொந்தரவு கொடுத்தேனா, அவர் எனக்குத் தொந்தரவு கொடுத்தாரா என்று கேளுங்கள்!'' என்றாள்.

''ஓகோ ! நீயும் கோபமாகத்தான் இருக்கிறாய்! இங்கே வா, பெண்ணே ! என் அருகில் உட்கார்ந்து கொள்!'' என்று கூறி இளையபிராட்டி பூங்குழலியைத் தன் அருகில் உட்கார வைத்துக் கொண்டாள்.

''ஐயா! இந்தப் பெண்ணை எதற்காகத் தருவித்தீர்கள்? ஏதாவது முக்கியமான காரியமா?'' என்று கேட்டாள்.

''அம்மணி! நான் இந்தப் பெண்ணைத் தருவிக்கவில்லை. இப்படி ஒரு பொல்லாத பெண் இருக்கிறாள் என்ற செய்தியே எனக்குத் தெரியாது. இவளாகவே தான்..'' என்று அநிருத்தர் தயங்கினார்.

''தேவி! முதன் மந்திரி ஏன் தயங்குகிறார்? மிச்சத்தையும் சொல்லச் சொல்லுங்கள்!'' என்றாள் பூங்குழலி.

''இவளாகவேதான் இவளுடைய அத்தையைத் தேடிக் கொண்டு வந்தாள்!''

''யார் இவளுடைய அத்தை? ஓகோ! சேந்தன் அமுதனின் அன்னையா? கோட்டைக்கு வெளியில் அல்லவா அவர்களுடைய வீடு இருக்கிறது?''

''இல்லை; அமுதனின் அன்னை இல்லை. இவளுக்கு இன்னொர் ஊமை அத்தை இருக்கிறாள். இளவரசி! தங்களுக்கும் தெரிந்திருக்க வேண்டிய செய்திதான். ஈழ நாட்டுக் காடுகளில் பித்துப் பிடித்தவள் போல் திரிந்து கொண்டிருந்த ஊமை ஸ்திரீ ஒருவர் உண்டு. அந்த மாதரசியை இங்கே ஒரு முக்கியமான காரியத்துக்காக அழைத்து வர விரும்பினேன். அதற்காகப் பெரு முயற்சி செய்தேன். கடைசியில், வெற்றி கிட்டியது. அந்தச் சமயத்தில்....''

குந்தவைதேவி சொல்லமுடியாத பரபரப்பை அடைந்து, ''உண்மையாகவா? அந்தப் பெண்மணி இப்போது இங்கே இருக்கிறாளா? நான் உடனே பார்க்க



வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே பீடத்தை விட்டு எழுந்தாள்.

''மன்னிக்க வேண்டும், தேவி! வெற்றி கிட்டும் சமயத்தில் இந்தப் பெண் குறுக்கிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டாள்!'' என்றார் முதன் மந்திரி.

குந்தவை மிக்க ஏமாற்றத்துடன் திரும்பவும் உட்கார்ந்து, ''பூங்குழலி! இது உண்மைதானா? என்ன காரியம் செய்து விட்டாய்?'' என்றாள்.

''தேவி! என் அத்தையை அழைத்து வருவதற்கு முதன் மந்திரி கையாண்ட முறையைக் கேளுங்கள். அப்போது என் பேரில் குற்றம் சொல்ல மாட்டீர்கள்!'' என்றாள் பூங்குழலி.

பிறகு, முதன்மந்திரி நடந்தவற்றைச் சுருக்கமாகக் கூறினார்.

கேட்டுக் கொண்டிருந்த இளைய பிராட்டி, ''அப்படியானால், இந்தக் கோட்டைக்குப் பக்கத்திலேதானே எங்கேனும் இருக்க வேணும்? தேடிப் பார்க்கலாமே?'' என்றாள்.

''நல்ல வேளையாகத் தேடிப் பார்க்க வேண்டிய அவசியம்கூட இல்லை. சேந்தன் அமுதன் குடிசையில் இன்று காலையில் பார்த்ததாக என் சிடன் சொல்லுகிறான்'' என்றார் முதன் மந்திரி.

''அப்படியானால், ஏன் வீண் காலதாமதம்? மற்றக் காரியங்கள் எல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். நாமே போய் அழைத்து வருவோம். தாங்கள் வருவதற்கில்லாவிட்டால் நான் போய் வருகிறேன். வானதி! புறப்படு, போகலாம்!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் அப்போது குறுக்கிட்டு, ''தேவி! சற்று யோசித்துச் செய்ய வேண்டும். புதிய மனிதர்கள் கூட்டமாய் வருவதைக் கண்டால் அந்த அம்மாள் மிரண்டு ஓடத் தொடங்கி விடலாம். பிறகு, புயலைப் பிடித்தாலும் அந்த அம்மணியைப் பிடிக்க முடியாது'' என்று சொன்னான்.

''ஆம், திருமலை சொல்லுவது சரிதான். நம்மைப் பார்த்ததும் பூங்குழலியின் அத்தை மிரண்டு ஓடத் தொடங்கி விடலாம். நமது பிரயத்தனமெல்லாம் வீணாகி விடும்! நீ என்ன யோசனை சொல்கிறாய், திருமலை!'' என்று முதன் மந்திரி கேட்டார்.

''இந்தப் பெண்மணியையே போய் அழைத்து வரும்படி சொல்லுங்கள். இந்த உலகத்தில் அந்த மாதரசியைக் கட்டுக்குள் வைக்கக் கூடியவர்கள் இரண்டே பேர்தான்! அவர்களில் இந்தப் பெண் ஒருத்தி!''

''இன்னொருவர் யார்?'' என்று முதன் மந்திரி கேட்டதற்கு, ஆழ்வார்க்கடியான் சிறிது தயங்கி, ''இன்னொருவர் கடலில் மூழ்கி விட்டதாக ஊரெல்லாம் வதந்தியாயிருக்கிறது!'' என்றான்.

குந்தவைதேவி அதைக் கவனியாதவள் போல், பூங்குழலியைப் பார்த்து, ''கரையர் மகளே! உடனே போய், உன் அத்தையை இங்கே அழைத்து வா! அவளுக்கு இங்கே ஒரு கெடுதியும் நேராது. மிக முக்கியமான காரியமாக உன் அத்தையை உடனே நான் பார்க்க வேண்டியிருக்கிறது! எனக்காக இந்த உதவி செய்வாய் அல்லவா?'' என்றாள்.

''ஆகட்டும், அம்மா! முயன்று பார்க்கிறேன். ஆனாலும் முதன் மந்திரி இப்படிப்பட்ட உபாயத்தைக் கடைப்பிடித்திருக்க வேண்டியதில்லை. முன்னாலேயே எனக்குத் தெரிந்திருந்தால்....''

''ஆமாம்; விஷயங்களை மறைத்து வைப்பதில் இம்மாதிரி அசந்தர்ப்பங்கள் நேரத்தான் நேருகின்றன. அதை நானே உணர்ந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். சீக்கிரம் அத்தையை அழைத்துக் கொண்டு வா! அதற்குப் பிறகு இன்னொரு முக்கியமான வேலை உனக்கு இருக்கிறது!'' என்றாள் இளையபிராட்டி.

''திருமலை! நீயும் இந்தப் பெண்ணோடு போய் விட்டு வா! கோட்டை வாசல் வழியாக நீங்கள் வருவதில் ஏதேனும் சிரமம் இருந்தால், நமது அரண்மனைக்கு வரும் இரகசிய வழியில் அழைத்துக் கொண்டுவா!'' என்றார் அநிருத்தர்.

பூங்குழலியும் ஆழ்வார்க்கடியானும் போன பிறகு, குந்தவை முதன் மந்திரியைப் பார்த்து, ''ஐயா! வாசலில் வந்து காத்திருப்பவர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி அனுப்பிவிட்டு வாருங்கள். மிக முக்கியமான காரியங்களைப் பற்றித் தங்களிடம் ஆலோசனை கேட்க வேண்டியிருக்கிறது!'' என்றாள்.

''இதோ வந்து விடுகிறேன், தாயே! எனக்கும் தங்களிடம் பேசவேண்டிய திருக்கிறது!'' என்று சொல்லி விட்டு அநிருத்தர் சென்றார்.

இத்தனை நேரமும் மௌனமாக இருந்த வானதி, ''அக்கா! பூங்குழலிக்கு இன்னொரு முக்கியமான காரியம் என்ன வைத்திருக்கிறீர்கள்? மறுபடியும் நாகைப்பட்டினத்துக்கு அனுப்பப் போகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''ஆம், வானதி! நீ வீணாகக் கவலைப் படாதே! பொன்னியின் செல்வனுக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்து விடாது.''

''நானும் அவளுடன் நாகைப்பட்டினத்துக்குப் போகிறேனே, அக்கா!''

''நீ போய் என்ன செய்வாய்? உன்னைக் காப்பாற்றுவதற்கு வேறு யாராவது வேண்டுமே?''

''அந்த ஒடக்காரிக்கு என்னைக் கண்டால் பிடிக்கவேயில்லை, அக்கா!''

''எப்படியடி அவள் மனத்தை நீ கண்டுபிடித்தாய்?''

''என்னுடன் அவள் பேசவே இல்லை!''

''நீயும் அவளோடு பேசவில்லை; அவளும் உன்னோடு பேசவில்லை.''

''நான் அடிக்கடி அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் என்னை ஒரு தடவைகூடத் திரும்பிப் பார்க்கவில்லை. அவளுக்கு ஏதோ என் பேரில் கோபம்!''

''ஆமாமடி, வானதி! இந்த நாட்டில் உள்ள கலியாணமாகாத கன்னிப் பெண்களுக்கெல்லாம் உன்பேரில் கோபமாய்த்தானிருக்கும். அதற்காக நீ வருத்தப்படுவதில் பயனில்லை'' என்று சொன்னாள் இளையபிராட்டி குந்தவை தேவி.

## அத்தியாயம் இருபத்தைந்து

# அநிருத்தரின் குற்றம்

முதன் மந்திரி தம் அரண்மனை ஆசார வாசலில் காத்திருந்தவர்களைப் பார்த்துப் பேசி அனுப்பிவிட்டு விரைவிலேயே திரும்பி வந்தார்.

''அம்மணி! ஏதோ என்னால் முடிந்த வரைக்கும் ஏற்பாடு செய்திருக்கிறேன். புயலினால் நேர்ந்த சேதங்களை அறிந்து வர நாலா பக்கமும் ஆட்களை அனுப்பியிருக்கிறேன். சின்னப் பழுவேட்டரையருக்கும் சொல்லியனுப்பி யிருக்கிறேன், நம் இருவரின் பொறுப்பிலும் பொக்கிஷசாலையைத் திறந்துவிட வேண்டும் என்று.''

''ஐயா! பெரிய பழுவேட்டரையரின் மாளிகையை யொட்டி நிலவறைப் பொக்கிஷம் ஒன்று இருக்கிறதாமே! அதில் கணக்கில்லாத பொருள்கள் குவிந்து இருப்பது உண்மையா? பெரிய பிராட்டி ஒரு தடவை சொன்னார்கள்.''

''அதைத் திறந்தால் அதிலுள்ள பொருளைக் கொண்டு ஆயிரம் பெரிய கோவில்கள் புதிதாய்க் கட்டலாமே என்று அந்த அம்மாளுக்கு எண்ணம். நான்கூட அந்த நிலவறைக்குள் போனதில்லை, அம்மா! அதற்குள் ஒரு தடவை போகிறவர்கள் உயிரோடு திரும்புகிறதில்லை'' என்றார் முதன் மந்திரி.

''அது போகட்டும், ஐயா! அந்த ஊமைத் தாயை இவர்கள் அழைத்துக் கொண்டு வந்து விடுவார்களா? கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போய் விடுமோ என்று எனக்குக் கவலையாயிருக்கிறது'' என்றாள் குந்தவை.

''தாயே! அந்த மாதரசியைப் பற்றித் தங்களுக்கு என்ன தெரியும்? எப்படித் தெரிந்தது? தாங்கள் ஏன் அவளைப் பற்றி இவ்வளவு பரபரப்பு அடைந்திருக்கிறீர்கள்....?'' என்றார் அநிருத்தர்.

''ஐயா! சில தினங்களுக்கு முன்பு சக்கரவர்த்தியே என்னிடம் அந்த மாதரசியைப் பற்றிச் சொன்னார்.''

''என்ன? அவள் உயிரோடிருப்பதாகச் சொன்னாரா, என்ன?''

''இல்லை, ஐயா! இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னார். அவள் இறந்துபோய் விட்டதாகவே எண்ணிக் கொண்டிருக்கிறார். அதனாலேதான் அவருடைய சித்தம் கலங்கிப் போயிருக்கிறது. அந்த ஊமைத்தாய் கடலில் விழுந்து இறந்து போய் விட்டதாகத் தாங்கள்தானே தெரிந்து கொண்டு வந்து என் தந்தையிடத்தில் சொன்னீர்களாம்? பின், அந்த மாதரசி உயிரோடிருக்கும் செய்தி தங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''தங்களை அதே கேள்வி கேட்க வேண்டும் என்று எண்ணினேன். தங்களுக்கு எப்படித் தெரிந்தது, தேவி?''

''அதற்கென்ன, சொல்லுகிறேன். வாணர் குலத்து வீரர் ஈழத்துக்குப் போய்த் திரும்பி வந்தாரே, அவர் முதலில் சொன்னார். பிறகு என் தம்பி அருள்மொழி....'' என்று கூறிவிட்டு, குந்தவை தன் தவற்றைத் தானே உணர்ந்தவள் போல் வாயைக் கையினால் பொத்திக் கொண்டாள்.

''தேவி! இளவரசர் அருள்மொழி வர்மரைப் பற்றித் தாங்கள் என்னிடம் சொல்ல விரும்ப வில்லையென்றால், சொல்ல வேண்டாம். தாங்கள் அந்தப் பெயரைக் குறிப்பிட்டதை நான் அடியோடு மறந்து விடுகிறேன்.''

''இல்லை, ஐயா! தங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவது என்ற எண்ணத்துடனேயே வந்தேன். விஷயங்களை மூடி மறைத்து வைப்பதினால் தீமைதானே தவிர நன்மை ஒன்றுமில்லை என்பதைக் கண்டு கொண்டேன். நேற்றிரவு எனக்கு அது நன்றாய்த் தெரிந்தது. ஐயா! என் இளைய சகோதரனைக் கடல் கொண்டு போய்விடவில்லை. பொன்னியின் செல்வனைச் சமுத்திர

ராஜன் காப்பாற்றிக் கரையில் சேர்த்தார். அவன் இப்போது நாகைப்பட்டினத்திலுள்ள புத்த விஹாரத்தில் இருக்கிறான். அவனைப் பார்ப்பதற்காகவே நான் நாகைப்பட்டினம் போயிருந்தேன். ஆனால் தங்களுக்கு இது எல்லாம் தெரியும் என்று எனக்கு ஒரு சந்தேகம் உண்டு.''

''தாங்கள் சந்தேகித்தது நியாயமே. ஆனால் தேவி, தெரிந்ததாக நான் காட்டிக் கொள்ள வில்லையே! வேறு யாருடைய காரியத்தில் தலையிட்டாலும் தங்களுடைய காரியத்தில் தலையிடுவதில்லை என்று வைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய ஆட்களுக்கும் அவ்விதமே கட்டளை இட்டிருக்கிறேன். தாங்கள் செய்யும் எதுவும் உசிதமாகத்தான் இருக்கும் என்பது என் நம்பிக்கை. நானும் மலையமானும் கொடும்பாளூர் வேளானும் அடிக்கடி பேசிக் கொண்டிருக்கிறோம்; 'இளைய பிராட்டி மட்டும் ஆண் பிள்ளையாய்ப் பிறந்திருந்தால், இந்த அகில உலகத்தையும் சோழர்களின் வெண் கொற்றக் குடையின் கீழ்க் கொண்டு வந்து தனியரசு செலுத்தி ஆண்டு வருவாள்' என்று.''

''அந்த மாதிரி எண்ணம் எனக்கு இருந்தது உண்மைதான். நான் பெண்ணாகப் பிறந்திருந்த போதிலும் என் சகோதரர்கள் மூலமாக அந்த மனோரதம் நிறைவேறும் என்று ஆசையுடன் இருந்தேன். அந்த ஆசையை இப்போது விட்டுவிட்டேன், ஐயா! இராஜ்ய விஷயங்களில் பெண்கள் தலையிடவே கூடாது என்று முடிவு செய்து விட்டேன். பாருங்கள்! என் சகோதரனை நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கும்படி செய்தேன். அதன் விபரீத பலனைப் பாருங்கள்!''

''ஒன்றும் நேர்ந்து விடவில்லையே, தாயே! பொன்னியின் செல்வனை நடுக்கடலில் காப்பாற்றிய சமுத்திர ராஜன் இப்போது கரையில் பத்திரமாயிருக்கும் போது தீங்கு விளைந்து விடுவானா?''

''ஐயா! தாங்கள் உடனே என் தந்தையிடம் வந்து இவ்வாறு தைரியம் சொல்லுங்கள்.''

''ஆகா! சக்கரவர்த்திக்குத் தெரியுமா, என்ன? இளவரசர் சூடாமணி விஹாரத்தில் இருக்கும் செய்தி!''

''நேற்று இரவுதான் சொன்னேன். சொல்லும்படியாக நேர்ந்து விட்டது.''

''ஆகா! இன்னும் கொஞ்ச நாட்கள் சொல்லாமலிருந்திருக்கலாம். தாங்கள் செய்திருந்தது மிக நல்ல ஏற்பாடு என்று நினைத்தேன். தேவி! சோழநாடு முழுதும் ஓரே கொந்தளிப்பாயிருக்கிறது. நேற்று அடித்த புயல் காரணமாக வெளியில் ஏற்பட்ட கொந்தளிப்பு, சில நாளாகவே சோழ நாட்டு மக்களின் உள்ளத்தில் பொங்கிக்கொண்டிருக்கிறது. மதுராந்தகர் மீதும் பழுவேட்டரையர்கள் மீதும் ஜனங்கள் ஓரே கோபமாயிருக்கிறார்கள். சக்கரவர்த்தியைச் சிறையில் வைத்திருப்பதாக எண்ணுகிறார்கள். இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கப்பல்கள் அனுப்பப்பட்டதையும் அறிந்திருக்கிறார்கள். இளவரசரைப் பழுவேட்டரையர்கள்தாம் கடலில் மூழ்கடித்துவிட்டதாகப் பலர் நம்புகிறார்கள். இச்சமயத்தில் இளவரசர் இந்த நாட்டில் இருப்பது தெரிந்தால் மக்கள் கொதித்து எழுவார்கள். இளவரசரின் தலையில் இப்போதே மணிமகுடத்தைச் சூட்டிவிட வேண்டும் என்று பெருங் கிளர்ச்சி செய்வார்கள். பழுவேட்டரையர்களும் சண்டைக்கு எப்போது முகாந்தரம் ஏற்படும் என்று காத்திருக்கிறார்கள். கொடும்பாளூர் பெரிய வேளார் பெரும் படை திரட்டிக் கொண்டு தஞ்சையை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். தேவி! சோழ நாட்டில் இரத்த வெள்ளம் ஓடப் போகிறது என்று அஞ்சுகிறேன். இந்தப் பெரிய சாம்ராஜ்யம் சகோதரச் சண்டையினால் அழிந்து விடுமோ என்று பயப்படுகிறேன். அப்படி ஒன்றும் நேராமல் இருக்க வேண்டும் என்று அல்லும் பகலும் ஸ்ரீ ரங்கநாதரைப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன்.''

''என்னுடைய பிரார்த்தனையும் அதுவேதான், ஐயா! என் சகோதரர்கள் இந்த சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் ஏற வேண்டுமென்ற ஆசையை நான் விட்டு விட்டேன். என்னைப் பொறுத்த வரையில், மதுராந்தகனுக்கே முடிசூட்டுவதில் இப்போது எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை.''

''தங்களுக்கு ஆட்சேபமில்லை, தாயே! ஆனால் மக்களுக்கு ஆட்சேபம் இருக்கிறதே! சக்கரவர்த்தி இன்னும் பல்லாண்டு இவ்வுலகில் வாழ வேண்டும். ஆனால் விதிவசத்தினால் அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டதென்றால், அன்றைய தினமே இந்தச் சோழ நாடு முழுதும் ரண களமாகிவிடும்....''

''ஐயா! அத்தகைய துர்க்கதி விரைவிலேயே நேர்ந்து விடுமோ என்று எனக்குப் பயம் அதிகமாயிருக்கிறது. நேற்றிரவு சக்கரவர்த்தியின் நிலை மிக்க கவலைக்கிடமாகி விட்டது. அதனாலேதான் அவரிடம் பொன்னியின் செல்வன் பத்திரமாயிருக்கிறான் என்று சொல்ல

வேண்டியதாயிற்று. ஆனால், சொல்லியும் அவர் நம்பவில்லை! அவருக்கு நான் வெறுமே ஆறுதல் சொல்வதாக எண்ணிக் கொண்டார். பல வருஷங்களுக்கு முன்னால் மாண்டுபோன 'பழிகாரி'யின் ஆவி அவருடைய புதல்வர்களின் மீது பழி வாங்குவதாக எண்ணிப் பிரமை கொண்டு பிதற்றுகிறார்.....''

''அந்தோ? கடவுளே! என்ன விபரீதம்? நேற்று இரவு நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லுங்கள்!''

''அதற்காகத்தான் வந்தேன், ஐயா! சொல்லித் தங்களிடம் யோசனை கேட்பதற்காகவே வந்தேன். முன் தடவை சுந்தர சோழர் மருத்துவ சாலை ஏற்படுத்துவதற்காக நான் வந்த சமயத்தில் சக்கரவர்த்தி எனக்கு அந்தப் பழைய வரலாற்றைக் கூறினார். ஈழ நாட்டை அடுத்த தீவில் தாம் ஒதுங்க நேர்ந்த போது, கரையர் மகள் ஒருத்தி தம்மைக் கரடிக்கு இரையாகாமல் காப்பாற்றியது பற்றிச் சொன்னார். பின்னர் அத்தீவிலேயே சில மாத காலம் சொப்பன சொர்க்க லோகத்தில் வாழ்வது போல் அந்தப் பெண்ணுடன் வாழ்ந்திருந்ததைப் பற்றிச் சொன்னார். பின்னர், இத்தஞ்சை புரிக்கு அவர் அழைத்து வரப்பட்டதையும், இளவரசராக முடிசூட்டப்பட்டதையும் கூறினார். அரண்மனை வாசலில் கூடியிருந்த கூட்டத்தின் மத்தியில் கரையர் மகளைப் பார்த்ததையும், ஆருயிர் நண்பராகிய தங்களை விட்டு அவளைத் தேடிக் கொண்டு வரச் சொன்னதையும், தாங்கள் தேடிப் போய்த் திரும்பி வந்து அவள் கடலில் விழுந்து இறந்தாள் என்று தெரிவித்ததையும் கூறினார். அதுமுதல் அடிக்கடி அந்தக் கரையர் மகள் ஆவி வடிவத்தில் வந்து தம்மைத் துன்புறுத்துவதாகவும் சமீப காலத்தில் அவள் வருகை அதிகமாகியிருப்பதாகவும் சொன்னார்.....''

''தேவி! அதையெல்லாம் நீங்கள் நம்பினீர்களா?''

''தந்தை கூறிய வரலாறு அவ்வளவு அதிசயமாயிருந்தபடியால் என் மனமும் மிக்க குழம்பிவிட்டது. இறந்து போனவளின் ஆவி வந்து தந்தையைத் தொந்தரவுபடுத்துவது சித்தப் பிரமையாயிருக்கலாம் என்று நினைத்தேன். பிறகு யோசித்துப் பார்க்கப் பார்க்க வேறு சில ஐயங்கள் உண்டாயின. வானதி ஒரு நாள் இரவு சக்கரவர்த்தியின் கூக்குரலைக் கேட்டுவிட்டுப் போய்ப் பார்த்தாள். பழுவூர் இளையராணி மாதிரி ஓர் உருவம் மன்னரின் எதிரில் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு மூர்ச்சித்து விழுந்தாள். அது முதல் அந்தக் கரையர் மகளுக்கும் இந்தப் பழுவூர் இளைய ராணிக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்று தோன்றியது. வல்லவரையரும் அருள்மொழியும் கூறியதிலிருந்து அது உறுதியாயிற்று. ஐயா! நந்தினி தேவி ஒரு வேளை அந்தக் கரையர் மகளின் புதல்வியாயிருக்க முடியுமா?''

''தங்களைப் போலவே நானும் ஊகிக்கத்தான் முடியும், தாயே! உருவ ஒற்றுமையைப் பார்த்தால் அப்படித்தான் கருத வேண்டியிருக்கிறது. ஆனால் அதிலிருந்து மட்டும் நிச்சயிக்க முடியுமா? ஒருவேளை கரையர் மகளின் கடைசித் தங்கையாகக்கூட நந்தினிதேவி இருக்கலாம். இதையெல்லாம் பற்றி நிச்சயமாகத் தெரிந்தவர்கள் இப்போது மூன்று பேர்தான் இருக்கிறார்கள்.....''

''அவர்கள் யார், சுவாமி?''

''ஒருவர்தான் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி. அவருடைய உள்ளத்தில் ஏதோ ஓர் இரகசியம் இருந்து வேதனை செய்து வருகிறது. ஆனால் அது இன்னதென்பதை அவராகச் சொன்னாலொழிய, நாம் கேட்டுத் தெரிந்து

## அமெரிக்காவில் திருமணம்



மணமகன் ஆர். விச்வநாதன், மோட்டார் கார்கள் தயாரிக்கும் க்ரைஸ்லர் கார்ப்பொரேஷனில் இன்ஜினியர். மணமகள் உமா, குழந்தை வைத்தியத்தில் நிபுணர். பரதநாட்டியத்திலும் நாட்டம் மிக்கவர். அமெரிக்காவில் வாழும் இவ்விருவரும் சட்டபூர்வமாக முதல் நாளும், மறுநாள் சாஸ்திரோக்தமாகவும் ஈஸ்ட் ஹாம்ப்டன் நகரில் திருமணம் புரிந்து கொண்டனர். வாழ்க மணமக்கள்!

கொள்ள இயலாது. மகானுகிய கண்டராதித்தர் காலமாகும் தறுவாயில் பெரிய பிராட்டி அதை அவரிடம் கூறினர் என்பது எனக்குத் தெரியும். கண்டராதித்தர் என்னிடம் சொல்லத் தொடங்கினர். இரண்டு வார்த்தை சொல்வதற்குள் அவருடைய மூச்சு நின்று விட்டது.....''

''மற்ற இருவரும் யார், ஐயா ?''

''மற்ற இருவரும் பேசத் தெரியாத ஊமைகள்; சேந்தன் அமுதனின் அன்னையும் பெரியன்னையுந்தான். இவர்களில் சேந்தன் அமுதனுடைய அன்னையிடமிருந்து நாம் ஒன்றும் தெரிந்து கொள்ள இயலாது. செம்பியன் மாதேவியிடம் அவள் அளவிலாத பக்தி உள்ளவள். அந்தத் தேவி உயிரோடிருக்கும் வரையில் இவள் ஒன்றும் தெரிவிக்க மாட்டாள். ஆகையினுல்தான் அவளுடைய தமக்கை மந்தாகினியை ஈழ நாட்டிலிருந்து அழைத்து வருவதற்கு நான் பெரும் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தேன்......''

''ஆகா! அந்தக் கரையர் மகளின் பெயர் மந்தாகினியா? அவள் உயிரோடிருப்பது தங்களுக்கு எப்போது தெரிந்தது ?''

''தேவி ! இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக அது எனக்குத் தெரிந்த விஷயந்தான்.''

''என்ன? என்ன? இருபத்தைந்து வருஷங்களாகத் தெரிந்துமா, என் தந்தையிடம் தாங்கள் சொல்லவில்லை? ஐயோ ! அவள் இறந்து விட்டாள் என்ற எண்ணத்தினுல் என் தந்தை எத்தனை மனோ வேதனைக்கு உள்ளானுர் என்பதெல்லாம் தங்களுக்குத் தெரியாதா ?''

''தெரியும், தாயே ! தெரியும்.''

''தெரிந்துமா அவரிடம் உண்மையைச் சொல்லாதிருந்தீர்கள்?''

அநிருத்தர் ஒரு நெடிய பெருமூச்சு விட்டார். அவர் உள்ளத்தில் ஒரு போராட்டம் நிகழ்ந்தது என்பதை அவருடைய முகம் எடுத்துக்காட்டியது. பின்னர் அவர் கூறினர்:

''தேவி! இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னுல் நான் ஒரு குற்றம் செய்தேன். முதன்முதலாக அதை இப்போது தங்களிடந்தான் சொல்லுகிறேன். கரையர் மகளைத் தேடி வரும்படி தங்கள் தந்தை என்னை அனுப்பினர் அல்லவா ? விரைவாகக் குதிரைமீது செல்லும் ஆட்களுடன் நானும் போனேன். கோடிக்கரை போய்ச் சேர்ந்தோம். அங்கே கொந்தளித்துக் கொண்டிருந்த கடலில் அவள் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து விழுந்து விட்டாள் என்பதை அறிந்தோம். அந்தப் பயங்கரக் காட்சியை நேரில் பார்த்தவர்கள் சொன்னுர்கள். தியாகவிடங்கரே நடுங்கிய குரலில் நாக்குழறக் கூறினர். அதைத்தான் நானும் தஞ்சாவூருக்கு வந்து என் நண்பரிடம் தெரிவித்தேன்....''

''இதில் தங்கள் குற்றம் என்ன ஐயா?'' என்றுள் குந்தவை.

''குற்றம் இதுதான்! கரையர் மகள் கடலில் விழுந்தாளே தவிர, அதிலே முழுகிச் சாகவில்லை. அத்தகைய கொந்தளித்த கடலில் படகு விட்டுக்கொண்டு வந்த வலைஞன் ஒருவன் அவளைக் கண்டெடுத்துப் படகில் ஏற்றிக் காப்பாற்றி விட்டான். கோடிக்கரைக்கு வெகு தூரத்துக்கு அப்பால் அவன் வந்து கரையேறினன். திரும்பி வரும் வழியில் நான் அந்தக் கரையேறும் படகைப் பார்த்தேன். அதில் இருந்த பெண் யார் என்பதையும் தெரிந்து கொண்டேன். அந்தப் படகுக்காரனிடம் நிறையப் பணம் கொடுத்து அவளைப் பத்திரமாக இலங்கைக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும்படியும் அங்கேயே இருக்கும்படியும் கூறினேன். அவனும் சம்மதித்துச் சென்றுன். நான் திரும்பித் தஞ்சைக்கு வந்து கரையர் மகள் கடலில் விழுந்து மாண்டு விட்டதாகக் கூறினேன். தங்கள் தந்தைக்கு நன்மை செய்வதாக நினைத்துக் கொண்டுதான் மனமறிந்து அத்தகைய குற்றத்தைச் செய்தேன். அந்தக் குற்றம் இத்தனை காலத்துக்குப் பிறகு இப்படி ஒரு விபரீதமான விளைவை உண்டாக்குமென்று எதிர்பார்க்கவில்லை....''

இளையபிராட்டி குந்தவை அப்போது குறுக்கிட்டு, ''ஐயா! தாங்கள் செய்தது குற்றமாயிருந்தாலும் என் தந்தைக்கு நன்மை செய்யும் எண்ணத்துடனேயே செய்தீர்கள். பிறகு, அக்கரையர் மகளைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டு வந்தீர்களா?'' என்று கேட்டாள்.

''ஏன்? அடிக்கடி கேள்விப்பட்டுத்தான் வந்தேன். இளவரசுப் பட்டம் சூட்டிக் கொண்டதும் சுந்தர சோழர் மதுரைப் போர்முனைக்குப் போனுர். நான் காசி க்ஷேத்திரத்துக்குச் சென்றேன். சில ஆண்டுகள் அங்கேயே தங்கி வேதாகம சாஸ்திரங்கள் பயின்றுவிட்டுத் திரும்பி வந்தேன். அப்போது பழையாறையில் ஈசானபட்டரின் தந்தை அந்தக் கரையர் மகளோடு அந்தரங்கமாக உரையாடிக் கொண்டிருந்ததைக் கண்டு வியந்தேன். அவர் ஓர் அதிசயமான செய்தியைச் சொன்னுர். அந்தக் கரை

# கல்கி

## 1970 தீபாவளி மலரை இலவசமாகப் பெற நீங்கள் என்ன செய்ய வேண்டும்?





## இலவசம் உண்மைதான்!

☐ தபால் செலவு உள்பட ரூபாய் ஆறு பெறுமானமுள்ள கல்கி தீபாவளி மலர் உங்களுக்கு இலவசமாகக் கிடைக்கிறது.

☐ ரூபாய் கணக்கில் அதன் மதிப்பு ஒருபுறமிருக்கட்டும். இலக்கிய நோக்கில் — கலைக் கண்ணோட்டத்தில் அதன் மதிப்பை அளவிடுவதென்ன சாத்தியமா? எத்தனை எத்தனை மூவர்ணப் படங்கள்! எத்தனை இரு வர்ணப் படங்கள்! எவ்வளவு கதைகள், கட்டுரைகள், நகைச்சுவை அம்சங்கள், புகைப்படங்கள்! அது சரி, இதை விவரிக்கப்போவானேன்? கல்கி தீபாவளி மலரின் தரம் தமிழர்கள் அறியாத ஒன்றா என்ன?

☐ இந்த விலைமதிப்பற்ற மலரை நீங்கள் இலவசமாகப் பெற என்ன செய்ய வேண்டும்?

☐ கல்கி வார இதழுக்கு இரண்டு ஆண்டு சந்தாவாக ரூபாய் நாற்பது மணிஆர்டர் அனுப்ப வேண்டும். நேரடியாக மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை — 31 என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும்.

☐ நினைவிருக்கட்டும்! நீங்கள் இத் தொகைக்கு இரண்டு ஆண்டுகளுக்கு 104 கல்கி இதழ்களைப் பெறுவதுடன் தபால் செலவு உள்பட ரூ. 6- விலையுள்ள 1970ம் ஆண்டு கல்கி தீபாவளி மலரை இலவசமாகப் பெறுகிறீர்கள்!

☐ கல்கிக்கு ஏற்கனவே சந்தாதாரராக இருப்பவர்களும் மேலும் இரண்டாண்டுகளுக்கு ரூ. 40- சந்தா அனுப்பி இந்த அன்பளிப்புத் திட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இலங்கை நேயர்கள் (இலங்கை நாணயப்படி) ரூ. 42-ம் மற்ற வெளிநாட்டு நேயர்கள் ரூ. 80-ம் அனுப்ப வேண்டும்.

☐ உங்கள் மணிஆர்டர் அக்டோபர் 15ந் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்க வேண்டும். அதற்கு அப்பால் இந்தச் சலுகையை நீடிப்பதற்கு இயலாது.

☐ வழக்கம் போல் ஏஜண்டுகளிடம் கல்கி தீபாவளி மலரை வாங்க விரும்பும் உள்நாட்டு நேயர்கள் ரூ. 5-ம் இலங்கை நேயர்கள் அந்நாட்டுக்குரிய விலையையும் ஏஜண்டுகளிடம் செலுத்தி முன்னதாகவே பதிவு செய்து கொள்ளலாம்.

யர் மகள் பெரிய பிராட்டியின் அரண்மனைத் தோட்டத்தில் வந்து சில நாட்கள் தங்கி யிருந்ததாகவும், இரட்டைக் குழந்தைகள் பெற்று அங்கேயே போட்டுவிட்டு ஓடிப் போனதாகவும் கூறினார். எப்போதாவது நினைத்துக் கொண்டு குழந்தைகளைப் பார்ப்பதற்காக அவள் இரகசியமாக வருவதுண்டு என்றும் தெரிவித்தார். குழந்தைகள் என்ன ஆயின என்று கேட்டேன். அவர் சொல்ல மறுத்து விட்டார். அது செம்பியன் மாதேவிக்கு மட்டுமே தெரிந்த இரகசியம் என்றும் கூறினார். நானும் அதைப் பற்றி அதிகம் கிளறுமலிருப்பது தான் நல்லது என்று சும்மா இருந்து விட்டேன். தேவி! அருள்மொழி குழந்தைப் பிராயத்தில் காவேரி நதியில் விழுந்து விட்டபோது, அவனைக் காவேரி அன்னை காப்பாற்றினாள் என்று எல்லாரும் சொல்லுவார்கள் அல்லவா? அப்படிக் காப்பாற்றியவள் உண்மையில் கரையர் மகள்தான் என்று என் மனதில் அச்சமயமே தோன்றியது....''

''தங்கள் உள்ளத்தில் தோன்றியது உண்மைதான் ஐயா! அருள்மொழி ஈழ நாட்டில் அந்த மாதரசியைப் பார்த்து விட்டுவந்து அவ்வாறுதான் சொன்னான். ஆனால் இந்த விந்தையைக் கேளுங்கள்! என் தந்தை என்ன எண்ணுகிறார் தெரியுமா? கடலில் விழுந்து இறந்த கரையர் மகள்தான் ஆவி வடிவத்தில் வந்து தம் மக்கள் மீது பழி வாங்குவதாக எண்ணுகிறார். நேற்றிரவு வெளியில் கடும் புயல் அடித்த போது என் தந்தையின் உள்ளப் புயலும் வேகத்தை அடைந்தது. இரவு முழுதும் அவர் தூங்கவே இல்லை. என்னையும் தூங்க விடவில்லை. பழைய கதைகளையெல்லாம் மறுபடியும் சொன்னார். 'கடலில் விழுந்து இறந்த அந்தப் பழிகாரிதான் இப்போது என் பேரில் பழி வாங்குகிறாள். அவள்தான் என் அருள்மொழியைக் கடலில் மூழ்க அடித்துக் கொன்று விட்டாள்! கரிகாலனையும் அவள் பழி வாங்காமல் விடமாட்டாள்!' என்று அடிக்கடி அலறினார். 'என் ஒரு மகனாவது உயிரோடிருக்கும்போது என்னைக் கொண்டு போக மாட்டாயா யமனே!' என்று கதறினார். அவருக்கு எவ்வளவோ நான் சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை. அதன்பேரிலேதான் நாகைப்பட்டினம் புத்தவிஹாரத்தில் அருள்மொழிவர்மன் பத்திரமாயிருப்பதைப் பற்றி அவரிடம் சொல்ல வேண்டி நேர்ந்தது....''

''அதற்குப் பிறகு சக்கரவர்த்தி சிறிது ஆறுதல் அடைந்தாரா ?''

''அதுதான் இல்லை. அதன் பிறகு சித்தப் பிரமை இன்னும் அதிகமாகி விட்டது. முதலில் அச்செய்தியை அவர் நம்பவே யில்லை. ஆனால் நானே நேரில் பார்த்துவிட்டு வந்தேன் என்று சொன்ன பிறகு நம்பினார். ஏன் அவனை அழைத்துக் கொண்டு வரவில்லை என்று கேட்டார். குளிர் சுரத்துக்குப் பிறகு பிரயாணத்துக்கு வேண்டிய உடல் பலம் வரவில்லை என்றும், விரைவில் அழைத்துக் கொண்டு வர ஏற்பாடு செய்வதாகவும் கூறினேன். ஆனால் அவனை இப்போது இங்கு அழைத்து வருவதால் இராஜ்யத்தில் ஏற்படக்கூடிய குழப்பத்தைப் பற்றியும் இலேசாகச் சொன்னேன். இதைக் கேட்டதும் அவருடைய மனப்போக்கு வேறுவிதமாகத் திரும்பிவிட்டது. 'இந்த இராஜ்யந்தான் என் பிள்ளைகளுக்கு யமனாக ஏற்பட்டிருக்கிறது. இராஜ்யம் அவர்களுக்கு இல்லை என்று தீர்ந்தால் என் புதல்வர்கள் உயிரோடு சுகமா யிருப்பார்கள். அதற்காகத்தான் அவர்களை இங்கு அழைத்து வர இவ்வளவு அவசரப்படுகிறேன்!' என்றார். திடீரென்று இன்னொரு பீதி அவர் மனத்தில் குடிகொண்டது. உக்கிரமான புயல் காற்றினால் நேற்றிரவு அரண்மனை யெல்லாம் கிடுகிடுத்துப் போயிற்று. ஒரு தடவை பேரிடி இடித்து ஓய்ந்ததும் என் தந்தை வெறி கொண்டு விட்டார். 'மகளே! அருள்மொழியை இனி நான் பார்க்கப் போவதில்லை. கீழைக் கடலில் தோன்றும் புயற்காற்றுக்களையும் சுழிக் காற்றுக்களையும் பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும். இன்று அடிக்கும் புயலினால் கடற்கரையில் தென்னை மர உயர அலைகள் எழும்பும். உள்நாட்டில் வெகுதூரம் கடல் பொங்கி வந்து மூழ்க அடிக்கும். காவேரிப் பட்டினத்தை அன்றொருநாள் கடல் கொண்டது போல் நாகைப்பட்டினத்தையும் கொண்டு போனாலும் போய்விடும். அதிலும் கடற்கரைக்கும் கால்வாய்க்கும் மத்தியில் உள்ள புத்த விஹாரம் ஒரு நாளும் தப்பிப் பிழைக்காது. அந்தப் பழிகாரி கரையர் மகள் கடலில் என் மகனைக் கொண்டு போக முடியவில்லை .அதற்குப் பதிலாகக் கரையிலேயே வந்து என் மகனைக் கொல்லப் போகிறாள்! நான் போய் இதோ அவளைத் தடுத்து என் மகனைக் காப்பாற்றப் போகிறேன்' என்று கதறிக் கொண்டு எழுந்திருக்க முயன்றார். அந்த முயற்சியில் தளர்ச்சியுற்றுப் படுக்கையில் விழுந்தார். ஐயா! அப்போது என் தந்தை விம்மி அழுத குரலைக் கேட்டால் கல்லும் மலையும் உருகிவிடும்!'' என்றாள் இளைய பிராட்டி. அவளுடைய கண்களில் அப்போது தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. (தொடரும்)

# ராமாயணம்

ராஜாஜி

## 64. கடலைத் தாண்டினான்

அடக்கத்தால் மறந்து கிடக்கும் தன் சக்தியை ஜாம்பவான் சொல்லத் தெரிந்து கொண்டு, ஹனுமான் ராம காரியத்தைச் செய்து முடிக்கச் சங்கற்பம் செய்து விட்டான். உடனே ஆவேசமாகத் தன் திட நிச்சயத்தையும் நம்பிக்கையையும் எடுத்துச் சொன்னான் :

''நீர் சொன்னபடியே ஆகுக. நான் குதித்துக் கிளம்பி ஆகாய மார்க்கமாகச் சென்று இலங்கையில் இறங்கி ஜானகியைக் காண்பேன். நீங்கள் சந்தேகப்பட வேண்டாம். நான் திரும்பும் வரையில் இவ்விடமிருங்கள். கடலைத் தாண்டுவதற்குப் பூமியை மிதித்துத் தாவ வேண்டும். அந்த மிதியைத் தாங்குவதற்குத் தகுந்த இடம் இந்த மலை'' என்று கூறி மகேந்திர மலையின் மீது ஏறினான்.

அங்கே தன் முழு பலமும் செலுத்திக் கொஞ்சநேரம் காலால் தரையை மிதித்து நடந்து உலாவினான். அதுவே அந்த மலை



யிலிருந்த சகல பிராணிகளுக்கும் சங்கடமாகி விட்டது. மலையை விட்டு வெளியேறி விட்டன. மலைமேலிருந்து ஹனுமான் கடலைப் பார்த்தான். மனத்தை ஏகாக்கிரப்படுத்தி இலங்கைக்குச் செலுத்தினான்.

'ராவணன் எடுத்துப் போன சீதா தேவியைத் தேடிக் காண்பேன். ஆகாய மார்க்கம் சென்று இந்தக் கடலைத் தாண்டுவேன்' என்று மனத்தில் சங்கற்பம் செய்து சூரியனையும், இந்திரனையும், வாயுவையும், பிரம்மாவையும், பூத கணங்களையும் தியானித்து நமஸ்கரித்தான். பிறகு கிழக்கு முகமாக நின்று தன் அவுரஸ பிதாவாகிய வாயு பகவானை மறுபடியும் தியானித்து அஞ்சலி செய்து விட்டுத் தன் உடலை இன்னும் பெருக்கிக் கொண்டு தெற்கு முகம் நோக்கினான்.

மலையைத் தன் கால்களால் மிதித்துக் கைகளால் அடித்தான். அப்படி அடித்ததால் மலையிலிருந்த மரங்களினின்றெல்லாம் புஷ்பங்கள் உதிர்ந்து மலையெல்லாம் மலர் மயமாகி விட்டது. அவன் மலை மேல் நடந்ததால் அந்த அழுத்தத்தைத் தாங்க மாட்டாமல் யானையின் கன்னத்திலிருந்து மதம் பெருகுவது போல் மலையிலிருந்து நீர் ஊற்றெடுத்துப் பெருகிற்று. பல நிற தாதுக்கள் மலையினின்று கிளம்பித் தெறித்து விழுந்தன. குகைகளினின்றும் மிருகங்கள் கத்திக்கொண்டு வெளியே ஓடின. பாம்புகள் படமெடுத்துக் கொண்டு விஷம் கக்கிக் கொண்டு கற்களைக் கடித்தன. அதனின்று நெருப்புப் பொறிகள் பறந்தன.

மயிர் சிலிர்த்து நின்று ஹனுமான் பெரும் கர்ஜனை செய்தான். வாலைத் தூக்கித் தரையை அடித்து உடலின் பின் பாகத்தைக் கருக்கி, மூச்சையடக்கிக் கால்களை நன்றாக ஊன்றிக் காதுகளை மடக்கித் தன் பலத்தை விருத்தி செய்து கொண்டு வெற்றிக் கர்ஜனை செய்து கிளம்பிக் கருடனைப் போல் ஆகாய மார்க்கமாக ராம பாணத்தின் வேகத்தோடு சென்றான்.

அவன் தாவிச் சென்ற வேகத்தால் பல மரங்கள் வேரோடு பறிக்கப்பட்டு அவன் கூடவே சென்றன. பிரயாணம்



போகும் போது பந்துக்கள் கொஞ்ச தூரம் கூடச் செல்வது போல் அந்த மரங்கள் புஷ்பங்களை உதிர்த்துக்கொண்டே ஆஞ்சனேயன்கூட ஆகாயத்தில் சென்றன.

முன் காலத்தில் இந்திரனால் துரத்தித் தாக்கப்பட்ட மலைகள் பிறகு வெட்டப்பட்டுக் கடலில் விழுந்தது போல், வானர வீரனைத் தொடர்ந்து சென்ற மரங்கள் கடலில் ஒன்றன்பின் ஒன்றாக வீழ்ந்தன. பல நிறப் புஷ்பங்கள் சிதறி விழுந்த கடலானது ஆகாயம் நட்சத்திரங்களுடன் ஜொலிப்பது போல் பொலிவடைந்து பிரகாசித்தது.

வான வீதியில் வேகமாகச் சென்ற ஹனுமானுடைய கைகள் ஐந்து தலை நாகம் போல் விளங்கின. ஆகாயத்தை விழுங்கிக் கொண்டே போவது போல் சென்றான். அவனது கண்கள், மலையில் காடு பற்றி எரிவது போல் ஜொலித்தன. சிவந்த மூக்கு, சந்தியா சூரியனைப்

போல் பிரகாசித்தது. நீண்ட தூம கேதுவைப் போல் ஆகாயத்தில் விளங்கிற்று ஹனுமானுடைய பெரும் வடிவம்.

செல்லும் வேகத்தால் காற்று கர்ஜித்தது. ஆஞ்சனேயனுடைய நிழலானது ஒரு கப்பல் போல் ஜலத்தின் மேல் அவன்கூடச் சென்றது. ஆகாயத்தில் ஒரு பெரிய மலை, சிறகுகள் கொண்டு பறப்பது போல் காணப்பட்டது. மேகங்களிடையில் மறைந்தும் தோன்றியும் சந்திரனைப் போல் பிரகாசித்தான். கந்தர்வர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். தேவ ரிஷிகள் ஆசீர்வதித்தார்கள். வால்மீகி பகவான் சித்திரித்திருக்கிற இந்தச் சமுத்திரம் தாண்டும் காட்சியைத் தற்கால ரீதியில் சொல்ல வேண்டுமானால், ஆகாயத்தில் கிளம்பி மேகக் கூட்டத்தைக் கிழாக்கி மேலே பறந்து மிக வேகமாகக் கர்ஜித்துக் கொண்டு செல்லும் ஆகாய விமானத்தைப் போல் பறந்து சென்றான் என்றும் சொல்லலாம்.

சந்தர்ப்பத்துக்கேற்ற தைரியமும், அறிவும், ஆலோசனைச் சக்தியும், சிந்தனை வேகமும், நிகரற்ற சாமர்த்தியமும், வினைத்திட்பமும் கொண்ட ஹனுமானுக்கு வழியில் சில சோதனைகள் ஏற்பட்டன. அவற்றை யெல்லாம் மிகத் திறமையாகச் சமாளித்துச் சென்றான்.

ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த சமயம் கடலில் மூழ்கி நின்ற ஒரு பெரிய பர்வதம் திடீரென்று மேலே வானளாவிக் கிளம்பிற்று. 'இதுவென்ன நடுவே வழியடைக்கிறது' என்று அதைத் தன் மார்பால் தாக்கினான். காற்றால் அடிக்கப்பட்ட மேகம் போல் அந்த மைனாக மலை அசைந்தது.

''அப்பனே! நான் மைனாக பர்வதம். சமுத்திர ராஜன் சகரர்களுடைய குலத்தில் உதித்த ராமசந்திரனுக்கு உதவ வேண்டுமென்று என்னை ஏவினான். சகர குலத்தாலல்லவோ சமுத்திரம் விருத்தியடைந்தது? அந்தத் தொடர்பைக் கௌரவித்து நீ என் மேல் கொஞ்ச நேரம் இறங்கி நின்று தங்கிப் போவாய். இளைப்பாறிச் சென்றாயானால் ராம காரியத்தை நன்கு முடிப்பாய். இந்திரன் மலைகளை யெல்லாம் வஜ்ஜிராயுதத்தால் அடித்துத் துன்புறுத்திய காலத்தில் நான் பறந்து சமுத்திரத்தில் மூழ்கி மறைந்து இன்னும் உயிரோடு இருக்கிறேன். எனக்குச் சரணம் தந்த சமுத்திரம் உனக்கு உதவும்படி ஏவியதனால் நான் வந்தேன். சமுத்திரத்துக்கும் சகரன் குலத்துக்கும் தொடர்பு உண்டல்லவா? உன் தந்தை வாயுவால் அல்லவோ நான் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தினின்று தப்பிப் பறந்து கடலில் ஒளிந்து கொள்ள முடிந்தது! விருந்தினனுக் கொஞ்ச நேரம் இளைப்பாறிச் சென்றாயானால் எனக்கும் சமுத்திர ராஜனுக்கும் சந்தோஷமாக இருக்கும்'' என்று மைனாக மலை வருந்திற்று.

ஹனுமான், ''அப்பா! நான் நிற்க முடியாது. கால தாமதம் ஆகும். ராம காரியத்தில் நான் செய்திருக்கும் சங்கற்பம் இதற்கு இடம் தரவில்லை. நீ உபசரித்துச் சொன்ன மொழிகளே போதும். நான் மகிழ்ச்சி அடைந்தேன்'' என்று விநயமாகச் சொல்லி மலையைக் கையால் பிரியமாகத் தடவிக் கொடுத்து விடைபெற்று அங்கே நிற்காமல் சென்றான்.

பிறகு வழியில் ஒரு பெரிய ராக்ஷஸ வடிவம், ''நீ என் வாய்க்குள் பிரவேசிப்பாய். வெகு காலமாக ஆகாரமின்றி உனக்காகவே காத்திருக்கிறேன்'' என்று பெரும் குகையைப் போல் வாயைத் திறந்தது.

''ராம காரியமாக நான் போய்க் கொண்டிருக்கிறேன். தடுக்காதே'' என்றான் ஹனுமான்.

''முடியாது. என் வாய்க்குள் புகுந்தே தீருவாய்'' என்றது அந்த ராக்ஷஸ உருவம்.

உடனே ஹனுமான் இன்னது செய்ய வேண்டும் என்று தீர்மானித்து வர வரத் தன் தேகத்தை வளரச் செய்து கொண்டான். சுரஸை என்கிற நாக மாதாவானவள் பூண்ட அந்த அரக்க வடிவமும் வாயை அதற்குத் தகுந்தபடி பெரிதாகச் செய்து கொண்டே போயிற்று. இப்படி மிகப் பெரியதாக வாய் திறந்ததும் ஹனுமான் தன் தேகத்தை அணுவளவாகச் சிறிதாக்கிக் கொண்டு அந்தப் பேய் வாய்க்குள் புகுந்து அவள் உடலினின்று வெளிப்பட்டு விட்டு மறுபடியும் தன் பெரிய உருவம் தரித்துக் கொண்டான்.

''உன் தீர்மானம் நிறைவேறி விட்டது. தாயே! உன் வாய்க்குள் நான் பிரவேசித்து ஆய்விட்டது. இனி உனக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை'' என்று ஹனுமான் சிரித்துக் கொண்டு சொன்னான்.

அதைக் கேட்ட அந்த நாகமாதாவும், ''உன் காரியம் வெற்றியுடன் முடியும். தேவர்கள் உன்னைச் சோதிக்கவே இந்த வடிவத்தை எடுத்து இதைச் செய்யச் சொல்லி நானும் செய்தேன். நீ போகும் ராம காரியம் நிச்சயமாக வெற்றி பெறும்'' என்று ஆசீர்வதித்துஅனுப்பினாள். (தொடரும்)


அப்படியா சொன்னான்? அயோக்கியப் பயல் ஒழிச்சுப் புடலாம்! முதல்லே பாட்டுப் போடறவன் அப்புறம் பாடறவன் இரண்டு பேரையும் தொலைச்சுக் கட்டிப்பிட்டா...
நீ என்ன தமிழ் சினிமாவைச் சீர்திருத்த வழி சொல்லிக்கிட்டு இருக்கியா?


இல்லே, இல்லே! ரகுராமனையும் பட்டப்பாவையும் சொல்கிறேன். அவங்க தாமாகவே ஒதுங்கும்படி நாம பக்குவமா நடந்துக்கணும். அப்போ சொத்து முழுவதும் தானாகவே நம்மகிட்ட வந்துடும்.
ஏதோ பெரிய திட்டத்தை ஒழுங்காப் போடு! நம்ம பிரதரை செய்த மாதிரி ... கொன்னு போய் ... கொடுக்காதே! ... கெடுக்காதே!


சாப்பாட்டு வேளையின் போது...
சின்னச் சாமி! ஒரு சைக்கிள் கிடைக்குமா? ... கிராமத்திலும் பட்டணத்திலும் ... இருக்காம்! ...
இங்க இருக்கிற பேய்களை விரட்ட அந்தப் பூதத்தைத் துணைக்கு அழைச்சுக்கிட்டு வரப் போறீங்களா?
சைக்கிள் ரெடி!


சந்தேகமும் சந்தோஷமும் போட்டியிடவே ரகுராமனுக்கு உணவு இறங்கவில்லை.
பாவி! சைக்கிள் இருக்குன்னு சொல்லிட்டானே! அண்ணாவும் தங்கையும் டவுனுக்குக் கிளம்பிட்டா? அவளை எப்படி சந்திக்கிறது? ஹோ, ஹோ! பயமில்லாமல் என்னைச் சந்திக்கத்தான் மோகனா இவனைச் சைக்கிளோடு அனுப்பி விடப் போகிறாள்! ஆஹா! அழகுடன் போட்டியிடுகிறது அவள் அறிவு!


இரவு ஒன்பது மணிக்குச் சமையல் அறையில்...
சிறந்த நாதா உன் சித்தம் இரங்காதா?
உனக்குச் சம்பளமும் என்ன குறைச்சலாகவா கொடுக்கிறார் எஜமான்? இன்னும் எதுக்கு இரக்கம்?


சமையலறையோடே நின்னு பரவாயில்லே. நீ என்னென்னவோ காரியம் சொல்றியே எனக்கு?
ஆமாம்! ரகுராமன் குடிச்ச மோரிலே நான் மருந்து கலந்ததால் அவன் தூங்கிட்டான். நீ மாடி வராந்தாவுக்குப் போய் இந்த ஜிப்பாவையும் சோடாபுட்டி கண்ணாடியையும் போட்டுக்கோ! காத்திரு! மோகனாவோட ... தெரியணும்.


கண்ணாடி அணிந்திருப்பதால் மாடி வராந்தாவில் பட்டப்பா பரிதவிக்கிறான்.
மேடை ஏறி நடிச்ச காலத்திலே கிடைக்காத ஹீரோ வேஷம் இப்போ கிடைச்சிருக்கு! ஆனா ... அப்பால் ஒண்ணும் தெரியலியே! என்ன இதுவோ ஆண்டவனே!
தொடரும்

# சிறு தொழிலுக்கு
# டி ஐ ஐ ஸி
## நிதியுதவி

சிறு தொழில் ஒன்றினை
ஆரம்பிக்கத் திட்டம்
இருக்கிறதா ?

அல்லது இப்பொழுதுள்ள
தொழிலை விஸ்தரிக்க
வேண்டுமா ?

எதுவாயினும் டி ஐ ஐ ஸி
உங்களுக்கு உதவத்
தயாராக உள்ளது.
டி ஐ ஐ ஸியை
அணுகுங்கள்

நடுத்தர மற்றும் பெரு
தொழிலுக்கும் டி ஐ ஐ ஸி
உதவி எப்பொழுதும்
போல் கிடைக்கும்.

**டி ஐ ஐ ஸி**

இதயபூர்வமான
நிதியுதவி



**தி தமிழ் நாடு
இண்டஸ்டிரியல்
இன்வெஸ்ட்மெண்ட்
கார்ப்பொரேஷன் லிமிடெட்.**

எல். எல். ஏ. கட்டிடம்,
150-A, மவுண்ட் ரோடு, சென்னை-2.
கிளை: 1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர்.

CriterionTIIC2453TM



# தர்ம யுத்தம்

நாடகம் ரொம்ப ரொம்ப நன்றாக அமைந்து விட்டால் விமரிசகர் பாடு திண்டாட்டம்தான். குறை கூறவும் கிண்டல் பண்ணவும் வாய்ப்பில்லாது போனால் விமர்சனத்தின் சுவை குன்றித்தான் விடும். இது நன்றாக இருந்தது; அது மிக நன்றாக இருந்தது என்று பட்டியல் போடுவதில் ரசம் என்ன? ''தர்ம யுத்தம்'' என்ற இந்த நாடகம் அப்படி ஒரு தர்ம சங்கடத்தில்தான் நம்மை ஆழ்த்தி விடுகிறது.

தேடித் துருவிப் பார்த்தால் ''சர்க்கரை இல்லாத காப்பியை ஸ்ரீகாந்த் அப்படி மேடையிலேயே துப்பியிருக்க வேண்டாமே, அரங்கத்தை ஒரு புனிதப் பொருளாகப் பாவிக்க நாம் பழகலாமே'' என்று சொல்லத் தோன்றும்.

மற்றபடி நாடகம் முழுக்க முழுக்க முதல் தரம். தமிழ் நாடக மேடைக்குக் கௌரவத்தைத் தேடித் தரும் நாடகங்களுள் ஒன்றான இதன் சிறப்பை நட்சத்திரங்கள் மூலம் இந்த விதமாகச் சுட்டிக் காட்டலாம்:

| | |
|---|---|
| டைரக்ஷன் : | ★ ★ ★ ★ ★ |
| நடிப்பு: | ★ ★ ★ ★ |
| காட்சி ஜோடனை: | ★ ★ |
| நகைச் சுவை: | ★ ★ ★ |
| பின்னணி இசை. | ★ |
| கதை : | ★ ★ ★ |
| வசனம் : | ★ ★ ★ ★ |

நட்சத்திரங்களின் எண்ணிக்கைக்கு ஏற்பத் தரம் உயர்வதாகக் கொள்ளவும்.

ரொம்ப ரொம்ப ரசிக்கத் தக்க விஷயம், கதாபாத்திரங்களின் குணசித்திரங்கள், செதுக்கி வைத்தாற்போல் அத்தனை துல்லியமாக அமைந்துள்ளதுதான்.

கதையில் தகப்பனார் மைந்தனின் நற்பெயரைக் காப்பாற்ற நடத்தும் தர்ம யுத்தம் ஒருபுறமிருக்கட்டும். நகரில் உள்ள அரங்கங்களைத் தரக் குறைவான நாடகங்கள் ஆக்கிரமிப்பதை எதிர்த்தே ஒரு தர்ம யுத்தம் தேவை தான். நல்ல நாடகங்களுக்கு ஆதரவு தர வேண்டும்; அதன் மூலம் நாடகக் கலையின் சீரான வளர்ச்சிக்கு உதவ வேண்டும் என்று கருதும் சபாக்களும் பொது மக்களும் தர்ம யுத்தத்துக்கு ஒரு மகத்தான வரவேற்பு அளிக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

குறிப்பாக ஒரிரு அம்சங்களைப் பாராட்டவோ ஒன்றிரண்டு நடிகர்களை சிலாகிக்கவோ இடமில்லாத வகையில் ஒரு 'டீம் ஸ்பிரிட்'டுடன் அனைவருமே இயங்குகின்றனர்; சோபிக்கின்றனர். எல்லோரையும் வாழ்த்துகிறோம். சுவரில் எழுதப்பட்டுள்ள டெலிபோன் நெம்பர்கள் முதல் சர்தார் ஹுக்கும் சிங் கூறிய பொன்மொழி வரை சிறிதும் பெரிதுமான எத்தனை எத்தனை விஷயங்களில் கலைக் கண்ணோட்டத்துடன் நுணுக்கமான கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது என்பதை நினைத்துப் பார்த்தால் பிரமிப்பு ஏற்படுகிறது.



உயர்ந்த நோக்கத்துடன் எழுதப்பட்ட கனமான நாடகம்தான் எனினும் குபீர் சிரிப்புக்கும் குறைவே யில்லை. நகைச்சுவை இந் நாடகத்தில் தண்ணீரில் எண்ணெயாய் மிதக்காமல் பாலில் நீராய் இழைகிறது. பருக ஏற்ற அளவோடும் நிற்கிறது. 'டெம்போ': இனிய தென்றலை அனுபவிக்கிறோம்; புயல் வேகம் யாருக்கு வேணும்?

அண்ணாவின் நூற்றாண்டு விழாவினையொட்டி அரங்கேறும் அர்த்தமிக்க இந்த அருமையான நாடகம் களங்கமற்ற முழுமதி.

**நாடக மேடை**

# கொஞ்சுமிளம் தென்றலோ,
# குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜேய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாருகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜேய்—ஜிகினாத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜேய் அழகு சோப் மணங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**

**டாடா** தயாரிப்பு.




## 9. கையெழுத்து

விடுதியைக் கடந்து தெருவுக்கு வந்ததும் சிவராமன் கூட வந்தவனிடம் கேட்டான்:

''என்ன விஷயம், நல்ல தம்பி?''

''தலைவர் வேதமூர்த்தி உன்னை அழைத்து வரச் சொன்னார்......'' என்றான், நல்ல தம்பி, தாழ்ந்த குரலில்.

வேதமூர்த்தியின் பெயரைக் கேட்டதும் சிவராமனிடம் பரபரப்புத் தோன்றியது. எத்தனையோ நாட்களாக யாரைப் பார்க்க வேண்டும், நேருக்கு நேர் பேச வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தானோ, அவரை இன்னும் கொஞ்ச நேரத்தில் சந்திக்கப் போவதை எண்ணிப் பரபரப்படைந்தான்.

கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்துக்குள் நுழைந்ததும் அளவுகடந்த ஆர்வத்தால் கட்டடத்துக்குள் பாய்ந்து ஓடினான். எந்தத் தலைவர் அவனுடைய கனவிலும், நனவிலும் அவனைப் பூரணமாக ஆட்கொண்டிருந்தாரோ அவரை, நேரில் சந்திக்கப் போகிறோம் என்ற எண்ணத்தினால் மிகுந்த பரபரப்புக் கொண்டிருந்தான். மாடிப் படிகளை இரண்டு இரண்டாகத் தாவி ஏறினான். அவனை அழைத்துச் சென்றவன், மாடி வராந்தாவைக் கடந்து பெரிய அறைக்குள் சிவராமனை விட்டு விட்டு வெளியே வந்து விட்டான்.

அறையில் பிரகாசமாக மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஒரு கட்டில் தென் பக்கத்தில் கிடந்தது. சிவராமன் அறைக்குள் நுழைந்ததும் கட்டிலில் அமர்ந்திருந்த நபர்மீது தான் அவன் பார்வை விழுந்தது. அவருக்கு நாற்பது வயதுக்குள்தான் இருக்கும். நல்ல உயரம். சிவந்த மேனி. ஒளி வீசும் கண்கள். பரந்த முகம். அவருடைய அழகான சின்னத் தாடியைக் கண்டதுமே அவர்தாம் தலைவர் வேதமூர்த்தி என்பதைத் தெரிந்து கொண்டான். சிவராமனைக் கண்டதும் கட்டிலில் அமர்ந்திருந்த வாறே புன்சிரிப்புடன் பார்வையாலேயே வரவேற்றார், தலைவர் வேதமூர்த்தி.

அவருடைய கண்களையே பார்த்தபடி சிலையாகி நின்று விட்டான் சிவராமன். இதயத்தையே ஊடுருவிப் பாய்ந்து துளாவிக் கொண்டிருந்த தலைவரின் பார்வையில் சிவராமன் உருகிக் கொண்டிருந்தான். உடல் சிறிது நடுங்கியது. நாக்கு வறண்டு விட்டது. உள்ளத்தில் நிரம்பியிருப்பது உற்சாகமா? அல்லது பயமா? அல்லது இரண்டுமேயா?

ஒரு கணம் தத்தளித்தான். வியர்த்துக் கொட்டியது. தலைவர் இலேசாகச் சிரித்தார். குறுந் தாடியை வலது கை தடவிக் கொடுத்தது.

''வா, தம்பி....''

அவருடைய கணீரென்ற குரல் அவனைப் பற்றி இழுத்தது. மெதுவாக நடந்து கட்டிலை நெருங்கினான். அவன் கையைப் பிடித்து இழுத்துக் கட்டிலில் தம் பக்கத்தில் உட்கார வைத்தார், வேதமூர்த்தி. அவருடைய ஸ்பரிசம் அவனுள் சிறிது நடுக்கத்தை உண்டாக்கியது. அவர் பேசினார் —

''உன்னைப் பற்றி நல்லதம்பியும், காந்தாமணியும் அடிக்கடி கூறியிருக்கிறார்கள். என்னை ஏன் நீ முன்பே பார்க்க வந்திருக்கக் கூடாது....?''

அவருடைய கனிவான பேச்சு, அவனுக்குத் தெம்பைக் கொடுத்தது. சிறிது வெட்கத்துடன் பதில் சொன்னான்.

''உங்களை நேரில் சந்திக்க வேண்டும் என்று வெகுநாட்களாக ஆசை. இன்று தான் முடிந்தது.''

வேதமூர்த்தி தம்முடைய வலது கையை அவன் தோளின் மீது அபிமானத்தோடு வைத்துக் கொண்டார்.

''உனக்குப் பொதுவுடைமைக் கொள்கைகள் மீதுள்ள ஈடுபாட்டைத் தெரிந்து கொண்டேன். உன்னைப் போன்ற துணிவுள்ள இளைஞர்களைத் தான் தேடி அலைகிறேன்'' என்று கூறி அவனை உற்றுப் பார்த்தார்.

தலைவரின் பாராட்டு அவனுள் பெருமையையும், நாணத்தையும் ஏற்

படுத்ியது. தலையைக் குனிந்தபடி உட்கார்ந்திருந்தான். அவனுடைய தோளைத் தட்டிக் கொடுத்துவிட்டு, ''இந்தக் கட்சியில் தீவிர அங்கத்தினனாகச் சேர்ந்து, கட்சிக்காக எதையும் சாதிக்கத் தயார்தானா?'' என்று கேட்டார் வேதமூர்த்தி.

உற்சாகத்துடன் தலை நிமிர்ந்த சிவராமன், ''உயிரையே வேண்டுமானாலும் கொடுக்கத் தயார்'' என்றான்.

''அவசரப்படாதே. உனக்குப் பத்து நாட்கள் தவணை தருகிறேன். நன்றாகச் சிந்தித்து முடிவுக்கு வா.''

''நான் எப்போதோ முடிவுக்கு வந்து விட்டேன்.''

''அவசரம் வேண்டாம். இன்றைக்குப் பத்தாம் நாள். இதே இடத்துக்கு இந்த நேரத்தில் வா. அப்போது உன் முடிவைக் கூறலாம்..அதற்குள் யோசித்துக் கொள்.... சிவராமன். இந்தக் கட்சிக்குப் பல இடங்களிலிருந்து எதிர்ப்பு இருக்கிறது. அரசாங்கமே எதிர்க்கும். தலை மறைவாகக்கூட வாழ வேண்டியிருக்கும். கட்சியின் கட்டுத் திட்டங்கள் மிகவும் கடுமையானவை. கட்சிக்குள் வந்து விட்டாயென்றால்.... பிறகு நீ பிரிந்து போவது என்பது இயலாத காரியம். நன்றாக யோசித்து முடிவுக்கு வா.... அவசரம் இல்லை.... எனக்கு உன் மீது நம்பிக்கை இருக்கிறது.... நீ இப்போது போகலாம். பத்தாம் நாள் இரவு, சந்திக்கலாம்'' என்று கூறிவிட்டுக் கட்டிலிலிருந்து எழுந்தார் வேதமூர்த்தி.

கட்டடத்தை விட்டு வெளியே வந்த போது, ஏதோ ஒரு கனவுலகிலிருந்து வருவது போலிருந்தது சிவராமனுக்கு.



சற்றுமுன் தலைவரைச் சந்தித்துப் பேசியதெல்லாம் உண்மைதானு என்றுகூடப் பிரமித்தான். ஒரு புத்துணர்ச்சியுடன் மாணவர் விடுதியை நோக்கி விரைந்து சென்றுன்.

அறையில் முரளி, பதினெரு மணி வரையும் தூங்காமல் புரண்டு கொண்டிருந்தான். சிவராமனின் வருகைக்காகக் காத்திருந்தான். அறைக்குள் வந்த சிவராமன், கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு முரளியைக் கட்டிக் கொண்டு கூத்தாடினுன்.

''டேய், நான் யாரைச் சந்தித்து விட்டு வருகிறேன், தெரியுமா?'' — சிவராமனின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

''சொன்னுல்தானே தெரியும்? வந்ததும் வராததுமாக இப்படிக் கூத்தாடினுல் என்ன புரியும்?'' என்றுன் முரளி திகைப்புடன்.

''வேதமூர்த்தியைப் பார்த்துப் பேசிவிட்டு வருகிறேன்....''

''ப்பூ...இதற்குத்தானு ஆர்ப்பாட்டம்?''

''வேதமூர்த்தி என்ன சாதாரண ஆளா?''

''கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் என்றுல், கடவுள் என்று அர்த்தமா?''

''கடவுள்தான்.... கடவுளேதான் ! பாட்டாளி வர்க்கத்தின் தெய்வம் அவர்.''

''பாட்டாளிகளை ஒரு காரணமாக வைத்துக் கொண்டு அரசியல் பண்ணுவது இன்று நாகரிகமாகி விட்டது. அரசியலுக்குப் பாட்டாளிகள் பலியாகிறுர்கள்.''

''முரளி! கம்யூனிஸக் கட்சியின் சக்தி உனக்குத் தெரியாதா?''

''எல்லாம் தெரியும். அதற்கு ஏதடா சக்தி? அந்தச் சக்தியை ரஷ்யாவிடமிருந்தும், சீனுவிடமிருந்தும் அல்லவா நீங்கள் தானமாகப் பெற்றுக் கொண்டிருக்கிறீர்கள்.''

''இன்று அத்தனை சக்தியும் வேதமூர்த்தியின் உருவில் இருக்கிறது..டேய், அவருடைய கம்பீரமும், அழகான சின்னத் தாடியும், பேசும் தோரணையும் கட்சிக்காக அவர் செய்திருக்கும் சாதனையும்.... நீ ஒரு முறை அவரைச் சந்தித்து விட்டால், அவருக்கு அடிமையாகி விடுவாய்.''

''ஓ....! இப்படி ஆளை மயக்கும் வித்தையால்தான் கட்சிக்கு இவ்வளவு கூட்டத்தைச் சேர்த்தாரா?''

முரளியிடம் தர்க்கம் செய்து பயனில்லை என்பதைப் புரிந்து கொண்டு, பேசாமல் விளக்கை அணைத்துவிட்டு, கட்டிலில் படுத்தான் சிவராமன்.



சிவராமனின் சிந்தனை, கடந்தகாலச் சம்பவங்களோடு ஒன்றிவிட்டதால் — சைக்கிளின் வேகம் மிகவும் குறைந்து விட்டது. வேகம் குறையவே சைக்கிள் ஒரு பக்கமாகச் சரியத் தொடங்கியது. அப்போது தான் சிவராமன் சுய உணர்வை அடைந்தான். சைக்கிளின் வேகம் அதிகரித்தது. தெரு வெறிச் சென்றிருந்தது. கடிகாரத்தில் மணி பத்தாகி யிருந்தது.

கம்யூனிஸ்ட் கட்சியின் மாபெரும் தலைவர் வேதமூர்த்தியைச் சிவராமன் சந்தித்த பிறகு என்னென்னவெல்லாம் நடந்து விட்டன! இன்று மாநிலத் தலைவனாகவே சிவராமன் ஆகிவிட்டானே! கட்சியில் இந்த அளவுக்கு அவன் உயர்வதற்குள் அவன் பட்ட வேதனைகளும், பெற்ற பயிற்சிகளும்.... இப்போது நினைக்கும்போதும் உடல் சிலிர்க்கிறதே!

முதன் முதலில் தலைவர் வேதமூர்த்தியைச் சந்தித்த பிறகு, பத்து நாட்கள் கழிந்து விட்டன. அன்று இரவுதான் அவர் கூறியிருந்த பத்து நாள் தவணை முடிகிறது. ஒன்பது மணிக்கு அறையை விட்டுப் புறப்பட்டான் சிவராமன். முரளி ஒன்றும் கேட்கவில்லை. சிவராமன் அந்த நேரத்தில் கட்சிக் காரியாலயத்துக்குப் போகிறான் என்பதை ஊகித்தே அறிந்துவிட்டான். சிவராமனைத் தடுப்பதில் பயனில்லை என்பதையும் அறிந்திருந்தான்.

''போகிற அவசரத்தில் டார்ச்சை மறந்து விட்டாயே?'' என்று கூறிக் கொண்டே மேஜை மீதிருந்த டார்ச்சை எடுத்து வாசலுக்கு வந்துவிட்ட சிவராமனிடம் நீட்டினான். சிவராமனின் முகத்தில் ஓர் அசட்டுக் களை தட்டியது. சிரித்துக் கொண்டே டார்ச்சை வாங்கினான்.

''டார்ச், தெருவுக்குத்தான் ஒளி காட்டும். அறிவுக்குக் காட்டாது'' என்றான் முரளி.

சிவராமன் வாசற்படியில் தயங்கி நின்றவாறே திரும்பி முரளியைப் பார்த்துச் சிரித்தான்.

''சிந்தனை டார்ச் என்னிடம் இருக்கிறது'' என்றான் சிரித்துக் கொண்டே.

''இருந்து என்ன பயன்? சீர்கெட்டுக் கிடக்கிறதே'' என்றான் முரளி.

''பழுது பார்ப்பவரைத்தான் நாடிப் போகிறேன்.''

''போ... போ, நீ பழுதாகாமல் திரும்பி வா....'' என்று முனகிக் கொண்டே அறைக் கதவைச் சாத்தினான் முரளி.

மாணவர் விடுதிக்குப் பக்கத்திலிருந்த வேப்ப மரத்தடியில் நல்லதம்பி காத்திருந்தான். சிவராமன் வந்ததும் இருவரும் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தை நோக்கி விரைந்து நடந்தார்கள்.

கட்டடத்துக்குள் நுழைந்த போது, சிவராமன் பரபரப்படைந்தான். அவன் உள்ளே வந்ததும் நல்ல தம்பி, வாசற்கதவைச் சாத்தித் தாளிட்டான். மாடி வராந்தாவில் அந்த மாவட்டத்தைச் சேர்ந்த முக்கிய தலைவர்கள் நாலைந்து பேர் இருந்தார்கள். சிவராமனைக் கண்டதும் எல்லாரும் மத்திய அறைக்குச் சென்றார்கள். அங்கிருந்த ஒரு பெரிய மேஜைக்கு முன்பு தலைவர் வேதமூர்த்தி அமர்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் சுவரில் மிகப் பெரிய அளவில் ஸ்டாலின் படமும், மாசே துங்கின் படமும் மாட்டப்பட்டிருந்தன.

சிவராமனைக் கண்டதும் வேதமூர்த்தி எழுந்து வந்து வரவேற்றார். ''நீ வருவாய் என்று எனக்குத் தெரியும்'' என்றார். அவனை மேஜையை நோக்கி அழைத்துச் சென்றார். மேஜை மீதிருந்த ஒரு தாளை எடுத்து அவனிடம் நீட்டினார். தாளை வாங்கி விளக்கொளியில் படிக்கத் தொடங்கினான். மற்றவர்கள் மேஜையை விட்டுச் சற்றுத் தள்ளி அணிவகுத்து நிற்பது போல் நின்று கொண்டிருந்தார்கள்.

சிவராமன், தன் கையிலிருந்த தாளைப் படித்துப் பார்த்தான். அதில் கட்சித் தொண்டன் செய்து கொடுக்க வேண்டிய வாக்குறுதிகள் அச்சடிக்கப்பட்டிருந்தன. அவற்றை மிகுந்த கவனத்துடன் மனத்துக்குள்ளேயே படித்தான். அவன் படித்து முடிக்கும் வரை எல்லாரும் பேசாமல் நின்று கொண்டிருந்தார்கள். படித்து விட்டுத் தலையை நிமிர்த்தினான் சிவராமன்.

''என்ன....?'' — வேதமூர்த்தி கேட்டார்.

''இதன்படியே நடந்துகொள்வேன்'' என்றான் சிவராமன் திடமாக.

அவனுடைய குரலில் எவ்விதத் தடங்கலும் இல்லை.

''சரி.... இரைந்து வாசி'' என்றார் வேதமூர்த்தி.

சிவராமன், தாளில் அச்சடிக்கப்பட்டிருந்த வாக்குறுதிகளை மற்றவர்களுக்குக் கேட்கும்படி இரைந்து படித்தான். எல்லாரும் அவன் படிப்பதை மிகுந்த மரியாதையுடன் நின்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். படித்து முடித்ததும் சிவராமன் கேட்டான்:

''இதில் கையெழுத்துப் போட வேண்டுமா?''



# கீதைக் கதைகள்

"படைக்கப்பட்ட பொருளின் தன்மையைப் பொறுத்தல்ல, படைக்கப்பட்ட பாவனையைப் பொறுத்துத்தான் ஆண்டவன் அவற்றை ஏற்றுக் கொள்கிறான்...."

## 9. சோறு

அரசடிப் பிள்ளையாருக்கு அன்று யோகம்! பெரியதொரு படையல். பல்லாயிரக்கணக்கான மோதகங்கள் கொழுக்கட்டைகள்! பல நூற்றுக்கணக்கான வடை மாலைகள்! பல அண்டாக்கள் நிறைய அவல் - கடலை முதலியன! தேங்காய்கள் மலை மலையாகக் குவிந்து கிடந்தன!

பூஜையை நடத்திப் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்க இரு கைகளும் போதவில்லையே என்ற அவதி குருக்களுக்கு!

இந்தத் தடபுடலுக்குக் காரணம், பல்கலைக் கழகப் பரீட்சைகளின் முடிவுகள் அன்றுதான் வெளியாகியிருந்தன. பிள்ளையாருடைய அருட்காப்பிலே நம்பிக்கை பூண்டு நேர்ச்சை வைத்தவர்கள், நன்றி நவில நள்ளும் போட்டியினுலேற்பட்ட விளை!

அப்பிரம்மாண்டமான படையலைப் பார்த்தபடி நின்றான் சிறுவன். பக்திக்கும், வேதனை உந்திய பரிவுக்குமிடையில் அவன் மனம் ஊசலாடிற்று. யோசனைகள் பல அவனுடைய பிஞ்சு மனத்தைப் பிறாண்டலாயின. அவனுடைய பக்குவத்துக்கு ஏற்ற யோசனை ஒன்று பிரகாசித்தது.

அதன் செயல்படுத்தலாக அவன் தன் வீடு சென்று திரும்பி, தன்னுடைய காணிக்கைப் பொருளைப் பிள்ளையாருக்கு முன்னுல் படைத்தான்.

இதனை அவதானித்த குருக்கள், "என்னடா அது?" எனச் சிறுவனை அதட்டினுர்.

"நம்ப பிள்ளையாருக்கு இஞ்சி படைத்திருக்கிறேன்...." என்றான் சிறுவன் பயபக்தியுடன்.

"பிள்ளையாருக்கு இஞ்சி படைக்கலாம் என்று யாரடா சொல்லித் தந்தது?" என்று குருக்கள் 'பாய்'ந்தார்.

சூழ்ந்து நின்ற பக்தர்கள் சிறுவனைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தார்கள்.

அவமான உணர்ச்சி மேகங்கள் சிறுவனின் உள்ளத்தில் கவியலாயின.

குரல் கேவலில் நசிவுற, "நீங்கள் படைத்திருப்பது முழுவதையும் நம்ம பிள்ளையார் சாப்பிட்டால்—அஜீரணக் கோளாறு ஏற்படாதோ? பாவம், அவரை நாம் இப்படிக் கஷ்டப்படுத்துதல் முறையா? எனக்கு வயிற்றுக் கோளாறு வந்தால், அம்மா இஞ்சிதான் தருவாள்...." என்றான்.

அவனுடைய விளக்கத்தைக் கேட்ட எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தார்கள்!

"படைக்கப்பட்ட பொருளின் தன்மையைப் பொறுத்தல்ல, படைக்கப்பட்ட பாவனையைப் பொறுத்துத்தான் ஆண்டவன் அவற்றை ஏற்றுக் கொள்கின்றான்" என்று பிள்ளையார் சொல்ல உன்னிய போதிலும் கல்லுப் பிள்ளையாராக அரச மரத்தின் கீழ்க் குந்தியிருப்பதில் அவர் இன்பம் கண்டார்!

— எஸ். பொன்னுத்துரை

---

"ஆமாம்....."

அவனுள் பரபரப்பும், ஒருவித வெறியும் பரவின. வேத மூர்த்தியை நேருக்கு நேராக நிமிர்ந்து பார்த்தான். அவன் முகத்தில் வியர்வைத் துளிகள் முத்துக்களாகப் பளபளத்தன.

அவனுடைய தோளில் மகிழ்ச்சிப் பெருக்கால் தட்டிவிட்டு மேஜை மீதிருந்த ஒரு பேனவை எடுத்து அவனிடம் நீட்டினுர், வேதமூர்த்தி. சிறிதும் தயங்காமல் அதை வாங்கி வாக்குறுதித் தாளில் கையெழுத்திட்டான். அவன் தலையை நிமிர்த்திய போது வேத மூர்த்தி, ஒரு போர் வீரனைப் போல் நிமிர்ந்து நின்று கொண்டு தம்முடைய வலது கையை நீட்டினுர். சிவராமன், பேனவை மேஜை மீது வைத்துவிட்டு உற்சாகத்துடன் தன் கையை நீட்டினன். இருவரும் கைகுலுக்கிக்கொண்டார்கள். பிறகு தள்ளி நின்று கொண்டிருந்தவர்கள் ஒவ்வொருவராக முன் வந்து அவன் கையைக் குலுக்கினர்கள்.

அந்த வாக்குறுதிச் சடங்கு முடிந்து அவன் வெளியே வந்த போது மணி பதினென்று ஆகிவிட்டது.

மறு நாள் மாலை, காந்தாமணியை ஹோட்டலில் சந்தித்தான் சிவராமன். அவனிடம் கட்சி அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டதற்கான அடையாளச் சீட்டைக் கொடுத்தாள். அதில், "கோதண்டம்" என்ற பெயர் எழுதப் பட்டிருந்தது.

"கட்சியில் உங்களுடைய பெயர் இதுதான்" என்றாள் காந்தாமணி. பிறகு சொன்னாள்:

"ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி நீங்கள் கல்லூரியை விட்டு விலக வேண்டியிருக்கும். சீக்கிரமே கட்சியில் பயிற்சி பெற வேறிடம் போக வேண்டியிருக்கும்."

"எங்கே போக வேண்டும்?"

"இப்போது தெரியாது.... பின்னுல் தெரிவிக்கப்படும். நீங்கள் முரளியோடு பழகுவதை விட்டு விட வேண்டும்."

"அவன் என்னுடைய உயிர்த் தோழன்." — பரபரப்புடன் கூறினன் சிவராமன்.

"இருக்கலாம். ஆனுல் கட்சியில் சேர்ந்த பிறகு, கட்சிதான் உங்களுக்கு உயிர். கட்சியில்கூட 'உங்களுக்கு



"பின்னாலே பஸ் காலியா வர்றது'ன்னு கண்டக்டர் சொன்னது எவ்வளவு உண்மை பார்த்தியா?"

உயிர்த் தோழன் என்று யாரும் இருக்கக் கூடாது. கட்சியில் கடமையும், பணியும்தாம் எல்லாம். மற்ற உணர்வுகளைக் களைவதுதான் கட்சியின் அடிப்படை லட்சியம்.''

''அப்படியானால், கட்சித் தோழர்களைக்கூட நேசிக்கக் கூடாதா?'' என்று வியப்புடன் கேட்டான் சிவராமன்.

''தோழர்களை நேசிக்கலாம். ஆனால் யாரையும் நம்பிவிடக் கூடாது.''

'' ஒருவரை ஒருவர் நம்பாமல் எப்படி....?'' — புரியாமல் கேட்டான் சிவராமன்.

''எந்தச் சமயத்தில் யார் துரோகம் செய்து காட்டிக் கொடுப்பார்கள் என்று சொல்ல முடியாது. எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும். கட்சி எதைச் செய்யக் கட்டளை இடுகிறதோ அதை மட்டும் செய்ய வேண்டுமே தவிர, கூட்டியோ குறைத்தோ செய்யவும் கூடாது, பேசவும் கூடாது'' என்றாள் காந்தாமணி.

சிவராமன் மனம் குழம்பினான். அவனுடைய குழப்பத்தைக் காந்தாமணி புரிந்து கொண்டாள். ''இவ்வளவையும் கேட்டுப் பயந்து விட்டீர்களா ?'' என்று கேட்டாள்.

''பயமா? என்ன பயம்?'' என்றான் அவன் பெருமிதத்துடன்.

வேதமூர்த்தியின் எதிரில் வாக்குறுதிச் சடங்கு நடந்து மூன்று மாதங்களுக்குப் பிறகு, சிவராமன், படிப்பைப் பாதியில் விட்டு விட்டுக் கட்சியில் தீவிரப் பயிற்சி பெறச் சென்று விட்டான்.

சிவராமனின் விதவைத் தாயார் பட்டம்மாள், தன் மகன் மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தாள். அவளுக்கு அவன் ஒரே மகன்.

சொந்த ஊரில் கொஞ்சம் நிலமும், ஒரு வீடும் சிவராமனுக்கு உண்டு. அதைக் கொண்டு செழிப்பாக இல்லாவிட்டாலும், வயிறு காயாமல் வாழ முடிந்தது. மகன் படித்து, பெரிய வேலையில் அமர்ந்து, சம்பாதித்துப் பெருமையோடு இருக்க வேண்டும் என்பது தாயின் மாளாத ஆசை. யார் போனாலும் மகனுடைய திருமணத்தைப் பற்றித்தான் பேசுவாள். யாருடைய மன நிலையைப் பற்றியும் சிவராமன் அக்கறை கொள்ளவில்லை. அவனுடைய நினைவெல்லாம் கட்சியைப் பற்றியே தான் இருந்தது. அந்த அளவுக்கு அவன் இதயத்தில் பற்றையும், வெறியையும் ஏற்றியிருந்தார், தலைவர் வேதமூர்த்தி.

ஒரு வருஷம் கேரளாவில் வயநாடு என்னும் பகுதியில் உள்ள காடுகளில் திரிய வேண்டியிருந்தது. அங்குதான் கம்யூனிஸ்ட் கட்சித் தொண்டர்களுக்குக் கொரில்லாப் போர்ப் பயிற்சியும், கட்சி பற்றிய சித்தாந்த பாட வகுப்புக்களும் இரகசியமாக நடைபெற்றன. அடிக்கடி தலைவர் வேதமூர்த்தியும், அந்த இரகசிய இடங்களுக்குச் சென்று ஊக்கமூட்டினார். கேரள மலைக் காடுகளில் ஒரு படையையே அவர் உருவாக்கியிருப்பதை அறிந்து சிவராமன் பிரமித்தான். பலப் பல கனவுகள் அவனுள் எழும்படி செய்து விட்டார் தலைவர் வேதமூர்த்தி ! குளவி, கூட்டுப் புழுவைக் கொட்டிக் கொட்டித் தன் இனமாக மாற்றுவது போல், வேதமூர்த்தியின் தொடர்பு சிவராமனைப் பூரணமாக மாற்றிவிட்டது. இனி அவனால், நினைத்தால்கூடக் கட்சியை விட்டு விலக முடியாத அளவுக்குக் கட்சியோடு பந்தம் ஏற்பட்டு விட்டது. அந்த உறவில்தான் சிவராமனுக்கு எவ்வளவு பிடிப்பு! அவனுடைய அறிவு, சிந்தனை, செயல் அனைத்தையும் கம்யூனிஸ்ட் கட்சி கொள்ளை கொண்டு விட்டது....

மலையாளத்துக் காடுகளில் ஒரு வருஷம் தலைமறைவாக வாழ்ந்து விட்டு வெளியேறியபோது, சிவராமனிடத்தில் தான் எவ்வளவு மாறுதல்! பழைய படபடப்பும், அவசரமும் மறைந்து நிதானமும், எதிலும் ஆழ்ந்த கருத்தைச் செலுத்தும் தன்மையும் வந்து விட்டன.

ஓராண்டுக்குப் பிறகு அவன் ஊர் திரும்பியபோது ஒருசில மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. — முரளி எம். ஏ. பரீட்சையில் எல்லோரும் வியக்கும்படி தோல்வியுற்றிருந்தான். சாரதா தமிழ் நாட்டிலேயே முதன்மையாகத் தேறியிருந்தாள். 'பாரதமணி'ப் பத்திரிகை ஆரம்பமாகியிருந்தது. இவற்றைத் தவிர வேறு மாறுதல் இல்லை. **(தொடரும்)**



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்— ராஜாஜி

46

கோவில்களில் செய்யப்படும் விக்கிரக ஆராதனை பாபம் என்றும் மூட நம்பிக்கை என்றும் சிலர் கருதுவது போல் நான் கருதவில்லை. பலர் கூடி ஆண்டவனுக்குப் பூஜை செய்ய வேண்டியது அவசியம். இதை ஏதாகிலும் ஒரு முறையில்தான் செலுத்த வேண்டும். அதற்கென்று ஒரு பொதுவான இடமும் வேண்டும். இதனாலேதான் கோவில்கள் தோன்றியிருக்கின்றன. கோவிலுக்குள் ஒரு மூர்த்தியிருக்க வேண்டுமா அல்லது மூர்த்தியில்லாமலே பூஜை செலுத்தலாமா என்கிற கேள்வி அவரவர்களுடைய சுபாவம். அவரவர்களுடைய பண்பாடு ஆகியவற்றைப் பொறுத்தது.

விக்கிரகங்கள் வைக்கப் பட்டிருக்கும் ஹிந்துக் கோவில்களும், கத்தோலிக்கக் கிறிஸ்துவக் கோவில்களும் மூட நம்பிக்கைக்கும் உண்மைக் கடவுளை மறைப்பதற்கும் வழியாகும் என்று நான் ஒப்புக்கொள்ள முடியாது. விக்கிரகம் வைக்கப்படாத மசூதிகளும் புதுத் திட்டக் கிறிஸ்துவக் கோவில்களுமே குறையற்ற ஞான ஸ்தானங்கள் என்று நான் நம்பவில்லை. மூர்த்தியோ தெய்வச் சிலையோ இல்லாமற் போனபடியினாலேயே அறியாமை நீங்கிவிட்டதாக எண்ணலாகாது. சிலுவை அல்லது வேறு ஒரு சின்னம் அல்லது ஒரு புஸ்தகம் இவைகூட மூடநம்பிக்கைக்கு வழியாகலாம். ஆண்டவனை மறந்துவிட்டு விக்கிரகங்களும் ஒலியும் நமக்கு உதவும் என்று மூடத்தனமாக எண்ணவும் முடியும். சீக்கியர் கோவில்களில் புஸ்தகமே மூர்த்தியாகிறது. கிறிஸ்துவக் கோவில்களில் சிலுவையே மூர்த்தி பூஜைக்கு உதவுகிறது. கண்ணன் விக்கிரகம் கல்லிலோ மண்ணிலோ மரத்திலோ செய்யப்படலாம். ஏசுநாதரின் தாய் மேரி அம்மையின் விக்கிரகம் இவையெல்லாம் பூரண பக்திக்கும் மெய்ஞ்ஞானத்துக்கும் உதவும் என்பது என் கருத்து. எல்லாம் வழிபடுகிறவனுடைய உள்ளத்தைப் பொறுத்திருக்கிறது.

(யங் இந்தியா 5-11-25)

நாம் முற்றிய ஞானிகள் அல்ல. நம்முடைய அறிவு மிகக் குறைவுபட்டுக் கிடக்கிறது. கண்ணுக்குப் புலனாகாத கடவுளைத் தியானித்துத் திருப்தி அடைவது கஷ்டம். ஏதேனும் ஒன்று, கையினால் தீண்டக் கூடியது, கண்ணுக்குக் காணப்படுவது — அதன் முன் விழுந்து நமஸ்கரிக்கக் கூடியது, ஒரு சின்னம் வேண்டியதாகிறது. அது கிரந்தமாக இருக்கலாம்; அல்லது கட்டடமாக இருக்கலாம், அல்லது மூர்த்திகள் அமைக்கப்பட்ட கோவில்களாகவும் இருக்கலாம். சிலருக்கு ஒரு புஸ்தகமே திருப்தி தருகிறது. சிலருக்கு வெறும் மசூதியே போதும். வேறு சிலருக்கு வெறும் கோவில் போதாது. கோவிலுக்குள் வீற்றிருக்க ஒரு மூர்த்தி வேண்டும். ஆனபடியால் கோவில்களை மூட நம்பிக்கையின் வடிவங்களாக எண்ணுவது தவறு. அந்த எண்ணத்தோடு போவதை விடக் கோவில்களுக்குப் போகாமல் இருப்பதே நல்லது. கோவில்களுக்குச் சென்றால் பக்தியோடு போக வேண்டும். அப்படிப் போய்ப் பூஜை செய்தால் உள்ளம் சுத்தமடையும். பூஜைக்குப் பின் உள்ளத்தில் ஆண்டவன் கோவில் கொள்வான்.

(ஹரிஜன் 23-1-37)

நான் மூர்த்தி பூஜை செய்பவன். மெய்ப் பொருளை மறக்கச் செய்யும் சின்னத்தை வேண்டாம் என்று எதிர்க்கவும் செய்வேன். மூர்த்தி பூஜை என்றால் என்ன என்பதை உண்மைப் பொருளில் அறிய வேண்டும். மூர்த்திக்குப் பூஜை செலுத்துபவனுடைய பக்தியைப் பாராட்டிப் பெரிதாகக் கருதுவேன். அதன் வழி மக்கள் மேம்பாடு அடைந்திருக்கிறார்கள். அது மிகவும் முக்கியமான சாதனம். ஆனபடியால் இந்த நாட்டைப் புனிதப்படுத்தி வரும் ஆயிரக் கணக்கான கோவில்களை என் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்றும் சக்தியை ஆண்டவன் எனக்குத் தருவானாக.

(யங் இந்தியா 28-8-27)



# உடலுக்கும் மருத்துவம் உள்ளத்துக்கும் மருத்துவம்!

**நூ**ற்றுக்கணக்கான குடும்பங்களுக்கு அறிமுகமானவர்; பிரபலமாக விளங்கும் சில நிறுவனங்களுக்கு 'மெடிகல் ஆபீசர்' ஆகச் சென்று வருபவர்; இரவு பகல் எந்நேரமும் வீடு தேடி வருபவர்களுக்கு மருத்துவம் பார்க்கும் ஒருவர்; தெர்மாமீட்டரும், ஸ்டெதாஸ் கோப்பும் பிடிப்பவர் — கையில் ஜால்ரா, சப்ளாக் கட்டைகளையும் ஏந்துகிறார்.

மார்கழி மாதத்தில், குளிர் மிகுந்த அதிகாலை நேரத்தில் கபாலி கோயிலைச் சுற்றியிருக்கும் மாட வீதிகளில் பஜனை கோஷ்டிகள் பக்திப் பாடல்களைப் பாடி வருவதைப் பார்க்கலாம் — இன்றும்கூட.

இவற்றுள் அதிகமாகக் கூட்டம் உடையது நாட் அண்ணாதுரையின் பஜனை கோஷ்டி. இக்கோஷ்டியினருள் நெடிதுயர்ந்த தோற்றத்தாலும் கணீரென்ற குரலாலும் அனைவர் கவனத்தையும் பனிச்சென்று கவர்கிறவர் டாக்டர் ராமமூர்த்தி. ''பஜனையில் உங்களுக்கு எப்படி நாட்டம் ஏற்பட்டது?'' என அவரைக் கேட்டேன்.

''சொல்லுகிறேன். நான் சிறு வயதிலிருந்தே சங்கீத சிட்சை பெற்றவன் மாதிரி, உச்ச ஸ்தாயியில் தைரியமாகப் பாடுவேன். சென்னையில் வந்து எழும்பூர் டிராமாடிக் சொஸைட்டி, திருவல்லிக்கேணி பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி, கருணை விலாச சபா முதலியவற்றுடன் தொடர்பு ஏற்பட்டது. பிறகு ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸில் அமரர் கல்கியின் 'பார்த்திபன் கனவு', — 'சிவகாமியின் சபதம்' முதலிய சரித்திர நாடகங்களை நடத்தினோம். 'பார்த்திபன் கன'வில் சிவனடியாராகவும், 'சிவகாமியின் சபத'த்தில் நாகநந்தியாகவும் வேஷம் போட்டேன். இவற்றைப் பல ஊர்களில் நடத்திப் பாராட்டுக்களைப் பெற்றிருக்கிறோம். பல நற்பணிகளுக்கு உதவி நாடகங்கள் நடத்தி வந்தோம்.

''ஒரு நாள் இரவு. மயிலை ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் காலஞ்சென்ற சி. இராமானுஜாச்சாரியாரைச் சந்திக்கச் சென்றேன். ஆதரவற்ற ஏழைப் பிள்ளைகளுக்குத் தீனபந்துவாக இருந்த அந்தப் பெரியவர், 'நீ பக்திப் பாடலை பாடிக் காது குளிரக் கேட்கணும். நீயே ஒரு பஜனை மண்டலியை நடத்தணும்....' என்று தெரிவித்தார். அவர் சொற்படி மறு வாரமே ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் பஜனை செய்ய ஆரம்பித்து விட்டேன். பாடத் தெரிந்த பலரும் என்னோடு சேர்ந்தார்கள். இதுதான் எங்கள் 'அபேதானந்தா பஜனை மண்டலி' பிறந்த கதை.''

வெள்ளிக்கிழமைதோறும் சென்னைக்கு அடுத்த திருமுல்லைவாயிலில் (பிருத்வி — இன்ஷியூரன்ஸ்) திரு பார்த்தசாரதி அவர்கள் வெகு சிறப்பாக வைஷ்ணவி பூஜையை நடத்தி வருகிறார். சென்னையிலிருந்து பல பெரிய மனிதர்கள் அந்தப் பூஜைக்குச் செல்கிறார்கள். டாக்டர் ராமமூர்த்தி குழுவினரும் அவரது மனைவி திருமதி சந்திரா ராமமூர்த்தியும் வெள்ளிதோறும் அங்கே பஜனைப் பாட்டுக்களைப் பாடுகிறார்கள்.

மாதம் பிறந்தால் ஐந்நூறு ஆயிரம் எனச் சம்பளம் வாங்கும் சிலர், டாக்டர் குழுவினரோடு பாடி வருகிறார்கள். எஸ். ஜி. கிட்டப்பாவின் சகோதரர் காசி ஐயர் ஆர்மோனியம் வாசிக்கிறார்.

பல மடாதிபதிகள், பெரியவர்கள் முன்பு பஜனைப் பாட்டுக்களை, சம்ஸ்கிருதம், தமிழ் தெலுங்கு, கன்னடம், மராத்தி, இந்தி முதலிய மொழிகளில் மணிக்கணக்கில் பாடிப் பாராட்டுக்களும் ஆசிகளும் பெற்றிருக்கிறது, 'அபேதானந்தா பஜனை மண்டலி'.

''இந்தப் பஜனைக் கோஷ்டி யாத்திரையில் மறக்க முடியாத நிகழ்ச்சிகள் எவை?''

''இரண்டைச் சொல்ல விரும்புகிறேன். ஒன்று பண்டரீபுரம் சென்று, துக்காராம் சந்நிதியில் பஜனைப் பாட்டில் இரவு ஒன்றரை வரை உலகை மறந்திருந்தோம். அன்று மாலையில் எங்கள் பஜனைப் பாடலைக் கேட்க வந்தவர்கள் எல்லோரும் எங்களோடு சேர்ந்து பாடவும் ஆரம்பித்துவிட்டார்கள்! அந்தப் பெரிய கூட்டமும் அவர்கள் பக்தியும் மெய்ம்மறந்து சேர்ந்து பாடிய விதமும் நினைத்தால் மெய் சிலிர்க்கிறது.

'' அடுத்தது — வங்காளத்தில் சைதன்யர் பிறந்த மாயாப்பூர் சென்று பாடியது. கௌடியா மடத்தின் நூற்றாண்டு விழா நிகழ்ச்சிக்காகவே சென்றிருந்தோம். கல்கத்தா உயர்நீதி மன்ற நீதிபதியும், வங்க கவர்னர் ஸ்ரீ தர்ம வீராவும் வந்து உட்கார்ந்து கடைசி வரை இருந்து கேட்டார்கள். 'சைதன்யரை எங்களைவிடத் தமிழர்களாகிய நீங்கள் அதிகம் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்!' என ஸ்ரீ தர்ம வீரா பாராட்டிய நிகழ்ச்சியும் எங்களால் மறக்கவே முடியாது !''
என்றார் திரு ராமமூர்த்தி.

—ஏ. சுவாமிநாதன்

இவருக்கு இதுவும் தெரியும்

''உங்க ரெண்டு பேருக்கும் பேச்சு சாதாரணமா இருந்தால், அந்தப் பெண்ணோட அம்மா எனக்கு இதைப் பத்தி ஏன் ஃபோன் பண்ணிச் சொல்லணும்?'' என்று கேட்டாள் திலகம், அமிர்தத்திடம்.

அமிர்தத்துக்கு இப்பொழுது புரிந்தது. பானு தன் தாயைப் பற்றிச் சொன்னது எல்லாம் உண்மை. பானு செய்வது அவள் தாயாருக்குப் பிடிக்கவில்லை என்பது நிச்சயமாகி விட்டது. தன் நடவடிக்கை எப்படி இருந்தாலும், எந்தத் தாயாருக்குத் தன் மகள் திருமணமான ஒருவனோடு தொடர்பு கொள்வது பிடிக்கும் ? கல்யாணமானவன் என்பது மட்டுமல்ல, பானுவைவிடத் தான் வயதிலே எவ்வளவு மூத்தவன்? சே ! தனக்கு ஏன் இந்தப் பைத்தியம் பிடிக்க வேண்டும்?....

தான் உண்மையோ? திலகம் இதை இவ்வளவு கலபமாகச் சொல்லக்கூடுமென்று அவன் எதிர்பார்க்கவில்லை....

தனக்கு இளமை கழிந்து விட்டது என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டுமா ? பானுவுக்கும் அவன் இப்பொழுது இளைஞன் இல்லை என்ற இந்த நிலையில்தான் அவனிடம் ஈடுபாடு. முதல் நாள் சந்தித்த போது அவனை 'மாமா' என்றுதான் குறிப்பிட்டாள். இளைஞர்களை அவளுக்குப் பிடிக்காமல் போனதற்குக் காரணமும் சொன்னாள். உண்மையிலேயே அவனுக்குப் பானுவிடம் விருப்பமா? அல்லது கடந்து போன தன் பருவத்தை நினைவூட்டும் கருவியாக அவள் இருக்கின்றாள் என்பதால் ஏற்பட்ட பரிவு உணர்வா ? —

அவன் பலவித உணர்ச்சிகளால் உந்தப்பட்டுக் கண்களை மூடிக் கொண்டான். காலெண்டர் கணக்கை ஏற்றுக் கொள்வது தான் விவேகம். எதையும் சவாலாகக் கொண்டு வாழ்

# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கிவிட்டன

## இந்திரா பார்த்தசாரதி



திலகம் அவன் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

''இனிமேல் உங்க இஷ்டப்படியெல்லாம் நான் நடந்துக்கறேன்.... அந்தப் பெண்ணோட அம்மா சொன்ன மாதிரி இப்படி விரஸமான காரியமெல்லாம் செய்யாதீங்க....''

''விரஸமா?....''

''ஆமாம், விரஸமா இல்லாமெ என்ன?...நமக்குச் சரியான வயசிலே கல்யாணமாகிக் குழந்தை பிறந்திருந்தால் அதுக்கு இப்பொ பதினேழு, பதினெட்டு வயசு ஆகியிருக்காதா...?''

''என்னை இப்படிக் கிழவனா காட்டறதிலே உனக்கு ஏன் இவ்வளவு அசுரத் திருப்தி...?''

''உங்களுக்கு வயசாகல்லேன்னு காட்டத்தான் இதையெல்லாம் செய்யறீங்களா...?''

அமிர்தம் ஒருகணம் திகைப்புற்று நின்றான். ஒரு வேளை இது



வதற்கான துணிவு தனக்குக் கிடையாது. நிகழ்காலத்தைப் பிடிவாதமாக உறுதிப்படுத்தியவாறு எதிரே உட்கார்ந்திருக்கிறாளே, இவள் தன் மனைவி.... இந்தச் சத்தியத்தில் தன்னை நிலைப்படுத்திக் கொண்டால் பிரச்னை இல்லை, சஞ்சலம் இல்லை....

அவன் கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் திலகத்தின் பெருமூச்சு அவனுக்குத் தெளிவாகக் கேட்டது. அவள் ஏதோ பேசிக் கொண்டேயிருந்தாள். அவள் பேசியது ஒன்றும் அவன் காதுகளில் விழவே இல்லை. அவனுக்கு அப்பொழுது அவள் தான் தேவையாக இருந்தாள்.

அடுத்த நாள் அவன் எழுந்திருக்கும்போது மிகவும் நேரமாகி விட்டது. இரவு முழுதும் பலவித சிந்தனைகள், கனவுகள். ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் இருந்தன.

திடீரென்று அவனும் திலகமும் கிழவர்களாகி விட்டாற் போன்ற பிரமை. அதைக் கனவென்று சொல்ல முடியாது. நினைவு இயங்கிக் கொண்டிருந்தது. திலகத்தின் தலை முழுதும் நரைத்துவிட்டாற் போலத் தோற்றம். அவள் தலையை அவன் தொட்டுப் பார்த்தான். திலகம் கண் விழித்தாள். ''என்ன வேணும்?'' ''ஒண்ணுமில்லே...'' ''யாருன்னு நினைச்சீங்க?'' அவன் திரும்பிப் படுத்தான். ஜன்னலருகே இருந்த மரத்தின் நிழல்கள் சுவரில் விளையாடிக் கொண்டிருந்தன. இன்னும் இது போன்ற, கனவுக்கும் நினைவுக்கும் இடைப்பட்ட பல காட்சி மயக்கங்கள்... நித்யா

வின் முகம், பானுவின் புன்சிரிப்பு. நேற்று ஹோட்டலில் பார்த்த அந்தக் கம்பீரமான இளைஞன் ஆகாயம் வரை வளர்ந்து, மேகத்திலிருந்து எட்டிப் பார்க்கிறான். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை மணலைத் தவிர வேறொன் றும் இல்லாத ஒரு பிரதேசத்திலிருந்து தான் தன்னந் தனியாய் நின்று ஒல மிடும் பரிதாபம்... அவன் குரல் எதி ரொலிக்கிறது. அந்த எதிரொலி நிழ லாய் விசுவரூபம் எடுத்து அவனுக்கு அச்சத்தைத் தருகிறது...

அவன் எல்லாக் கனவுகளையும் ஒழுங்குபடுத்தி நினைவுக்குக் கொண்டு வர முயன்றான். முடியவில்லை.

"இன்னிக்கு ஆபீஸ் போகலீங்களா?"

அவன் திரும்பிப் பார்த்தான். திலகம் நீராடிவிட்டு ஒரு புதுப் புடவை கட்டிக் கொண்டிருந்தாள். தலை நிறையப் பூ.

அவன் கட்டிலை விட்டுக் கீழே இறங் கினான்.

"ஆபீஸ் போகலேன்னா எங்கேயா வது போவோமே?"

"எங்கே?"

"நேரு பார்க்... கார் விடக் கத்துக் கொடுங்க..." அவன் பதில் சொல் லாமல் குளியலறையை நோக்கிச் சென்றான்.

"இதுதான் எனக்குப் பிடிக்கலே... கேட்டுட்டு அலட்சியமாப் போறீங்க பாருங்க...." என்று திலகம் சொல்லிக் கொண்டிருப்பது அவன் காதுகளில் கேட்டது.

இன்று ஆபீஸ் போகாவிட்டால் ஒரு சௌகர்யம். பானுவைப் பார்க்கவேண் டாம்... சே... தான் அவளைக் காண ஏன் பயப்பட வேண்டும்?—இதைப் பய மென்று சொல்ல முடியாது...அவளைத் தினந்தோறும் சந்தித்துத்தான் ஆக வேண்டுமா? — ஆனால் இதற்கு மாற்று? திலகத்துக்குக் கார் கற்றுக் கொடுப்பதி லின்றும் தப்ப முடியாது....

குளியலறையி லிருந்து திரும்பிய அவன், கையில் செய்தித் தாளுடன் உட்கார்ந்தான்.

"மணி எவ்வளவு தெரியுமா?" என்று கேட்டாள் திலகம்.

"எவ்வளவு?"

"எட்டரை... ஆபீஸ் போறதில் லேன்னு தீர்மானம் செஞ்சுட்டீங் களா?"

"போக வேண்டாம்னு பார்த்தால் நீ பயமுறுத்திக்கிட்டே இருக்கியே, கார் விடக் கற்றுக் கொடுங்கன்னு.."

திலகம் சிரித்தாள். "பயப்படா தீங்க... கார் விடக் கற்றுக் கொடுக்க வேண்டாம். வேறே எங்கேயாவது சுத் திட்டு வருவோம் வாங்க...."




"ஒரு மணி நேரமாக விடாமல் கும்மிடி பூண்டி வண்டி இன்னும் ஐந்து நிமிஷத்தில் புறப்படும்னு 'மைக்'கில் அறிவித்தபடி இருக் கிறார்கள். எவ்வளவு நம்பிக்கை பார்த்தீங்களா அவர்களுக்கு !"

"எங்கே போகணுங்கிறே?"

"கரோல்பாக் போகலாம் வாங்க... அஜ்மல்கான் ரோட்டிலே கொஞ்சம் 'ஷாப்பிங்' செய்யணும் நான்..."

அவள் என்ன ஷாப்பிங் செய்யவேண் டும் என்று அவன் கேட்கவில்லை. இது வரை கேட்டதுமில்லை.

செய்தித் தாளில் சில சூடான அர சியல் செய்திகள் அவன் கவனத்தைக் கவர்ந்தன. அவன் அவற்றில் ஆழ்ந் தான்.

"என்ன பேசாமல் இருக்கீங்க?..... போகலாமா?"

"........."

"கேக்கறேன், வாயை மூடிக்கிட்டு உட்கார்ந்திருக்கீங்களே, அழைச்சுக்கிட் டுப் போக விருப்பமில்லையா?..."

"எங்கே?"

"எங்கேயா?... என்னை அழைச்சுக் கிட்டுப் போறதாயிருந்தால் உங்களுக்கு எப்போதுமே இப்படித்தான். நான் என்ன, அப்படிச் சொகுசா இருக்கேனா, ஹோட்டலுக்கு அழைச்சிக்கிட்டுப் போக?"

அமிர்தம் செய்தித் தாளை மூடிவைத் தான். அவள் பேச்சு அவனுக்கு எரிச் சலை மூட்டியது. அவன் எழுந்திருந்து சோம்பல் முறித்தான். அவள் சொற் களால் தான் பாதிக்கப்படவில்லை என் பதே தான் அவளுக்கு அளிக்கும் தண் டனை. இதை உணர்ந்துகொள்ளக்கூடிய அளவுக்கு அவளுக்கு நுணுக்கம் போதாது என்று அவனுக்குப் பட்டது. ஆகவே இதைத் தொடர்ந்து அவன்

சொன்னான்.. ''சரி, நான் ஆபீஸுக்குப் போறேன்...''

''ஆபீஸ் போறீங்களா?''

''ஆமாம்...''

இதற்கு மேல் தன் இயற்கையான சுபாவத்தைக் கட்டுப்படுத்த முயன்ற திலகத்தால் பொறுக்க முடியவில்லை.

''கண்டவளோட ஹோட்டலுக்குப் போவீங்க, என்னோட கடைக்கு வர மாட்டீங்களா?''

''அது என் இஷ்டம்...''

''என்னது?... உங்க இஷ்டமா?... உங்க இஷ்டமா?...''

திலகம் மிகுந்த கோபத்துடன் சுவரருகே சென்று தலையை மோதிக்கொண்டாள். அமிர்தம் வேகமாக அவளைப் பின்தொடர்ந்து அவளைப் பின்னால் இழுத்தான்.

''உனக்கென்ன 'ஹிஸ்டீரியா'வா?''

''ஆமாம். எனக்கு ஹிஸ்டீரியாதான். பைத்தியம் பிடிச்சிடுச்சு... உங்களை என்னோட வைச்சுக்கத் தெரியாத பைத்தியம்... பைத்தியம், பைத்தியம்...''

அமிர்தம் அவளைப் பற்றி இழுத்துக் கொண்டு வந்து சோபாவில் உட்கார வைத்தான். அவள் முகத்தை இரு கைகளாலும் மூடிக் கொண்டு அழத் தொடங்கி விட்டாள்.

''இதோ பார் எதுக்கு அழறே?... என்ன ஆயிடுச்சி...? நான் செத்துட்டேனா?...''

அவள் உள்ளே போய் விட்டாள். பதில் ஆவேசமாக வரும் என்று எதிர்பார்த்த அவனுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாக இருந்தது. ஆக்ரோஷத்துடன் பொழிந்தாலாவது அவளுடைய செறிந்த உணர்ச்சிகள் கரையக்கூடுமென்று அவன் நினைத்தான். தன் கோபத்தின் சுகத்தில் இளைப்பாறுவது போல் அவள் இன்னோர் அறைக்குப் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டு விட்டாள். அவள் கதவைப் படீரென்று சாத்தியது அவன் முகத்தில் அறைவது போலிருந்தது.

அன்று மாலை அவன் ஆபீசிலிருந்து ஆகாஷ்வாணி பவனுக்குச் சென்ற போது, பானு அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள்.

அவன் காரை நிறுத்தியதும், அவள் கார்க் கதவைத் திறந்து கொண்டு மிகுந்த உற்சாகத்துடன் அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

''நேத்து வீட்டிலே என்ன ஆச்சு?'' என்று கேட்டாள் பானு.

அமிர்தம் அவளை ஆச்சரியத்துடன் நோக்கினான்.

''எனக்கு எல்லாம் தெரியும்....உங்க மிஸஸ்கிட்டே எல்லாத்தியும் சொல்லிட்டதா எங்கம்மா சொன்னாள். இப்படியாவது நான் உங்களைச் சந்திக்கிறதைத் தடுக்கலாம்னு அவள் எண்ணம். ஆனா அவளாலே இது முடியாதுங்கிறது எனக்கு நிச்சயமாகத் தெரியும்..''

பானுவால் எப்படிப் புன்னகையுடன் இதைப் பற்றிப் பேச முடிகிறது? — திலகத்துக்கும் தனக்கும் காலையில் நடந்த சண்டை பெரும் பாரமாக அவன் நெஞ்சை அழுத்திக் கொண்டிருக்கும் போது, அவள் தன் அம்மாவின் எதிர்ப்பைப் பற்றிச் சிறிதுகூடக் கவலைப்படுவதாகத் தெரியவில்லையே? இதற்கு அவள் வளர்ந்துள்ள சூழ்நிலை காரணமா? அல்லது அம்மாவுக்குத் தன் எதிர்ப்பு உணர்ச்சியைக் காட்ட வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக அவள் தன்னை நாடுகிறாளா? — இந்த நிலைமையை அவள் சந்தோஷத்துடன் அநுபவித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் திலகத்துடன் சண்டையிட்டுக் கொண்டு வந்த இந் நிலைமையைத் தன்னால் அநுபவிக்க முடிகிறதா? இதற்கு என்ன காரணம்?—

சே... எதைப் பற்றியும் சிந்திக்கக் கூடாது. அவ்வப்பொழுது உருவாகும் நிகழ்ச்சியின் சத்தியத்தில் இறப்பையும் எதிர்ப்பையும் பற்றிச் சிந்திக்காமல் ஆழ்வதுதான், நான் தனக்குச் செய்து கொள்ளும் நியாயம்... அருகில் இருக்கும் பெண் பானுவாக இருந்தால் என்ன, யாராக இருந்தால் என்ன?— நிகழ்வின் பிரதிநிதி. இறப்பும் ஒரு காலத்தில் நிகழ்வாக இருந்ததே அதனுடைய சுகம். ஒவ்வோர் அநுபவமும் அந்தந்தக் கால அளவில் முற்றுப் பெறுகின்றது. ஒன்று விழித்திருக்கிறோம் அல்லது தூங்குகிறோம் — அநுபவம், அநுபவமின்மை — நிகழ்ச்சி அல்லது நிகழ்ச்சியின்மை, செயல் அல்லது நினைவு — செயலின்மை அல்லது மனச் சூன்யம் — ஒவ்வொன்றும் அதனளவில் முடிவடைந்த ஒரு நிலை — இதுவும் விஞ்ஞானத்துக்கு உடன்பட்ட கருத்துத் தானே? — பௌதிகம், 'தொடர்ச்சி' என்ற கொள்கையை எங்கே ஒப்புக் கொள்ளுகின்றது?

''இப்போ எங்கே போகலாம்னு உத்தேசம்?'' என்று பானு கேட்ட போது அவள் குரல் பல ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து ஒலிப்பது போல் அவனுக்குப்பட்டது. இக்கேள்விக்குத் தன் மனம் அப்பொழுதிருந்த நிலையில் விடை சொல்லுவதுதான் இந்த நிமிஷம் அவனுக்கு விதித்திருந்த தருமம்.

# போலி உறுப்புகள் மலிவு. உங்கள் உயிர் அப்படியல்லவே

EI-பிரேக் வால்வை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்.

பிரேக் பெடல் எவ்வளவு அழுத்தப் படுகிறதோ அதற்கேற்ப காற்றழுத்தம் உண்டாக்கப்படுகிறது. [illegible] பிரேக் எவ்வளவு இயங்குகிறது என்பதை டிரைவர் உணரமுடிகிறது.

ஆகவே, சாலை பாதுகாப்பைக் கெடுக்க ஒரே ஒரு போலி உறுப்பு போதும்! போலி உறுப்புகள் உயிருக்கே அபாயம் ஏற்படுத்தலாம்.

காற்றழுத்த பிரேக்குகட்கு எப்போதும் CD-TVS அசல் உறுப்புகளைப் பொருத்துவதே பாதுகாப்பாகும்.

## ஃபுல்ஏர்/ஏர் அஸிஸ்ட் பிரேக்குகளுக்கு அசல் உறுப்புகள் CD-TVS கம்பெனியால் மட்டுமே தயாரிக்கப்படுகின்றன






எப்போதும் CD-TVS தயாரிக்கும் அசல் உறுப்புகளையே கேட்டு வாங்குங்கள்




**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்.**
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை-50

**வண்டிகளின் விநியோகஸ்தர்களிடமும், எங்களுடைய பிராந்திய விநியோகஸ்தர்களிடமும் கிடைக்கிறது.**

தமிழ் நாடு, மைசூர், கேரளா, ஆந்திரப் பிரதேசம், பாண்டிச்சேரி மற்றும் கோவா பிரதேசங்களுக்கு விநியோகஸ்தர்கள் :

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்**
37, மவுண்ட் ரோடு, சென்னை - 6

# குழந்தைகள் விரும்பும் வடிவங்கள்

பிரிட்டானியா ஜூலாஜிகல் பிஸ்கட்டுகள் - சிறப்பாக குழந்தைகளுக்கென்றே பிரிட்டானியா தயாரிக்கும் சின்னஞ்சிறு பறவைகள், மிருகங்கள் வடிவிலான பிஸ்கட்டுகள். அவை தின்னத்தின்ன தெவிட்டாதவை: தீஞ்சுவை மிக்கவை. அவற்றை குழந்தைகள் தின்பதற்குமுன்—சிறிய மிருகக் கண்காட்சி சாலை போன்று அணிவகுத்து நிற்கவைத்து அளவிலா ஆனந்தம் அடைகின்றனர்.

## பிரிட்டானியா ஜூலாஜிகல் பிஸ்கட்டுகள்




என்றாலே உயர்தரம்



BSC/8815 TAM

"எங்கேயாவது ஹோட்டலில் போய்த் தங்குவோமா ?"

அவள் அவனை வியப்புடன் நோக்கினாள். பதில் சொல்லவில்லை.

"போவோமா?"

அவள் தலையசைத்தாள்.

**ப**ழைய தில்லியிலிருந்த அந்த ஹோட்டல் மொகலாயர் காலத்துக் கட்டடமாக இருக்க வேண்டும். சின்ன அறை; ஒரு பக்கம் சுவர், இன்னொரு பக்கம் மரப் பலகை தடுப்பு. படுக்கையில் விரித்திருந்த போர்வை நிறம் மங்கிப் போய் ஓர் அசட்டுப் பளபளப்புடன் காணப்பட்டது. சாடின் துணி. ஹோட்டலின் முதலாளி ஒரு முஸ்லிம் போலிருக்கிறது.

சுற்றிச் சூழ்ந்திருந்த நிர்ப்பந்தங்களும், தளைகளும் நீங்கிய நிலையில், தனியே 'எல்லையற்ற சுதந்திரத்தை' அக்குறுகிய வரையறையில் உணர்வதற்காக அவ்விடத்தை நாடி வந்த அமிர்தமும் பானுவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நின்றனர்.

"ஒரு நூறு வருஷங்களுக்கு முன்னாலே போயிட்ட மாதிரி இருக்கு ..." என்றாள் பானு.

"நம்முடைய பரிபூரண சுதந்திரத்தை உணர்ந்து கொள்வதற்கான சந்தர்ப்பம்...." என்றான் அமிர்தம்.

அங்கு போடப்பட்டிருந்த பழைய நாற்காலியொன்றில் உட்கார்ந்து கொண்ட பானு சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறே ?"

"எப்போ பழைய தில்லிக்கு ஓடி வந்து, யாரும் பார்க்காம இருக்கிறதுக்காக இந்த ஷாஜஹான் காலத்து ஹோட்டல்லே தங்க வந்திருக்கீங்களோ, அப்போ உங்களுக்குச் சுதந்திரத்தைப் பத்தி என்ன பேச்சு ? — யாரைக் கண்டு பயந்து இந்தத் தலைமறைவு ?...."

அமிர்தம் இதை எதிர்பார்க்கவில்லை. யாரைக் கண்டு பயம்? — அவள் சொல்வது போல் 'பரிபூரண சுதந்திரம்' என்பது எதிர்ப்பே சாத்தியமில்லாத, கண்காணாத இடத்தில் தன்னை அடைத்துக் கொள்ளும் வீரமா? — ஆனால் இதை உணர்ந்தும் அவள் தன்னுடன் இங்கு வருவதற்கு ஏன் உடன்பட்டாள்? புதிய அநுபவத்தை நாடும் ஆவலா ? அல்லது தனக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கிறது என்று அறிய முற்படும் பரிசோதனையா ?

"உங்களுக்குக் கோபமா?"

"ஹூம்...." என்று பெருமூச்செறிந்த அமிர்தம் பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவன்போல் பரபரப்புடன், "இல்லே! இல்லே!" என்றான்.

பானு நாற்காலியிலிருந்து எழுந்திருந்து கட்டிலில் போய் உட்காரப் போனாள். உட்காருவதற்கு முன்னால் அதன் மேல் விரிக்கப்பட்டிருந்த அந்தப் போர்வையை எடுத்தாள். உள்ளே மிகவும் அழுக்காக இருந்த மெத்தை. வாடை 'குப்'பென்று வீசியது.

"கஷ்டம்! கஷ்டம்!" என்று முகத்தை அவள் சுளித்துக் கொண்டாள்.

"'ஸாரி', வேறே எங்கேயாவது போகலாம்...." என்றான் அமிர்தம்.

பானு அந்தப் படுக்கையை அள்ளிக் கீழே போட்டாள். கட்டிலின் நாடா படுக்கையைக் காட்டிலும் இன்னும் மோசமாக இருந்தது.

கட்டில் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டாள் பானு. "முன்னாலே இங்கு வந்திருக்கீங்களோ?" என்று அவள் கேட்டாள்.

"நீ என்ன நினைச்சுக் கேட்கிறே?"

"இதற்கு முந்தி நீங்க இங்கே வந்திருக்கேளா ?"

அமிர்தம் பதில் கூறவில்லை. நேற்று அவன் அவளிடம் தன் பழைய வாழ்க்கையைப் பற்றிச் சொல்ல முயன்றான். அவள் கேட்கத் தயாராக இல்லை. ஆனால் இப்பொழுது அவள் மிக அலட்சியமான பாவத்துடன் இந்தக் கேள்வியைக் கேட்கிறாள். தன்னுடைய எந்தவிதமான பதிலைப் பற்றியும் அவள் கவலைப்படவில்லை என்ற பாவனை....

"பானு ! உன்னிடம் சில விஷயங்களைப் பற்றிப் பேச ஆசைப்படறேன் !"

அவள் சற்று ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தாள். "என்ன இப்படி....என்னிடம் சம்மதம் பெற்றுத் தான் நீங்கள் பேசணுமா ?"

அவன் நாற்காலியில் உட்கார்ந்தான். அது கொஞ்சம் இடதுபுறமாகச் சாய்ந்தது. சமாளித்துக் கொண்டான்.

"அப்போ நான் சொல்லப் போவதை நீ கேட்கத் தயாரா ?"

"சொல்லப்போவதைப் பொறுத்தது."

"நான் திலகத்தைக் கல்யாணம் செய்துக்கிறதுக்கு முன்னாலே இன்னொரு பெண்ணோட சிநேகிதமா இருந்தேன். அவள் பேர் நித்யா...."

"இது அவசியம் தேவையா ?"

"எது ?"

"அவள் பெயர்....."

அமிர்தம் சிறிது அதிர்ச்சிக்குள்ளானான். வாஸ்தவந்தான், அவளுடைய பெயரைத் தான் எதற்காகச் சொல்லியிருக்க வேண்டும் ?

''சரி! அதை மறந்து விடு. அவன் உன் மாதிரியே இருந்தான்... அதாவது... தோற்றம்... பேச்சு எல்லாம்.''

பானு சிரித்தான். தான் 'ஸீரியஸாக'ப் பேசும் போது அவன் சிரித்தது அவனுக்குப் பிடிக்கவில்லை.

''என்னைக் கேலி பண்ணறயா?''

''இல்லே, இல்லே! அவனுடைய பிம்பத்தைத் துரத்திண்டு அலையறீங்களோன்னு எனக்குச் சந்தேகம். அதுக்காகச் சிரிச்சேன்....''

'' அவளைக் கல்யாணம் செய்துக்க முடியலே என்னுலே....''

''கல்யாணம் செய்துண்டா 'இமேஜ்' ஏது?... இப்படித் துரத்திண்டு போறது தான் உங்களுக்குத் திருப்தியைத் தர்றதோ என்னவோ?''

'' ஒரு வேளை நீ சொல்வது சரியாயிருக்கலாம். அவளைக் கல்யாணம் பண்ணிக்கிட்டிருந்தால் என்ன ஆயிருக்கும்?''

'''இதுதான் நித்யா'ன்னு நீங்க மனசிலே நினைச்சிண்டிருந்தீங்களே, அந்த 'பொண்ணை நீங்க கல்யாணம் பண்ணிக்கலேன்னு தெரிஞ்சிருக்கும்... நீங்க சிநேகமாயிருந்து பேசிப் பழகிய நித்யாவுக்கும் கல்யாணம் பண்ணிண்ட நித்யாவுக்கும் இடையில் ரொம்ப வித்தியாசம் இருப்பதைப் புரிஞ்சுக்கிட்டிருப்பீங்க'' என்றான் பானு. (தொடரும்)

---

# பூரான் கடித்தால்...!

பூரானின் உடம்பானது கணுக்கணுவாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு கணுவிலும் வலது, இடதுபுறத்தில் ஒவ்வொரு கால் காணப்படுகிறது. பூரானின் கடைசிக் கணுப் பகுதியின் கால்கள் மற்ற கால்களைவிட மிக நீளமானதாக இருக்கும். இது தன் தலையின் முன் பகுதியில் மீசை போன்ற இரண்டு உணர் கொம்புகளைக் கொண்டுள்ளது. பூரான் ஊர்ந்து செல்லும்போது இவ்வுணர் கொம்புகளைத் தரையில் தொட்டு நிலத்தின் வாடையையும் மற்றப் பொருள்களின் வாடையையும் பகுத்தறிந்து தான் செல்லும் இடத்துக்குத் தங்கு தடையின்றி விரைவாகச் செல்கிறது. தலைக்குப் பின் பகுதியில் உள்ள முதல் கணுவில் இரண்டு விஷக் கொடுக்குகள் முள் போன்று கூர்மையாக வளைந்து காணப்படுகின்றன. இவ்விஷக் கொடுக்குகளால்தான் தன் இரைகளைத் தாக்கிக் கொன்று உணவாக்கிக் கொள்கிறது. தன் எதிரிகளை எதிர்த்துப் போராடவும் உபயோகித்துக் கொள்கிறது.

பூரான்கள் பகல் முழுதும் கற்களுக்கடியிலும், மரப் பட்டைகளுக்கடியிலும் மற்றும் மறைவான இடங்களிலும் தங்கி ஓய்வெடுத்துக் கொள்கின்றன. பெரும்பாலும் இரவில்தான் வேட்டையாடப் புறப்படுகின்றன. பூரானுக்கு இரண்டு கண்கள் உள்ளன. ஆனால் கண் பார்வை மங்கலானது. ஒளியில் ஏற்படும் மாறுதல்களை மாத்திரம் சற்றுப் பாகுபாடு படுத்தக் கூடிய திறன் பெற்றவை. இக்கண்களால் பொருள்களை நன்கு பார்க்க இயலாது. ஆகவேதான் உணர் கொம்புகளைக் கொண்டு வாடை அறிந்து தன் இரையைப் பிடிக்கிறது. காடுகளில் வசிக்கக்கூடிய சில வகைப் பெரிய பூரான்கள் கூட்டுக் கண்களை (Compound eyes) உடையனவென்றும் அவை ஒரு பொருளை இன்னது என்று நன்கு பார்க்கக் கூடிய திறன் கொண்டவை என்பதாகவும் ஆராயப்பட்டுள்ளது.

உலகெங்கிலும் இதுவரை இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட பூரான் வகைகள் அறியப்பட்டுள்ளன. இவற்றில் காடுகளில் வசிக்கக் கூடிய பூரான்கள் சுமார் 6 அங்குலம் முதல் 9 அங்குலம் வரை நீளமுள்ள ராட்சத உருவம் கொண்டவை. ஒருவகைப் பூரான் ஒன்றரை அடி நீளம் கூட வளரக் கூடியது. பெரிய பூரானாக இருப்பினும் மனிதனைக் கடிக்க நேர்ந்தால் அவ்வலி ஒரு தேள் கொட்டியதற்குச் சமமாகவே இருக்கும். மனிதன் உயிரிழக்கக்கூடிய அளவுக்கு விஷத்தன்மை கிடையாது. ஆனால் ஒரு சிறிய பறவையைக் கடித்தால் அது இறந்து விடும்.

மதுரைக்கு 13 மைல்களுக்கப்பால் உள்ள அழகர் மலைக் காட்டில் சுமார் பத்து வகைப் பூரான்கள் பல நிறங்களில் தோற்றமளிக்கின்றன. இவற்றில் பாமர மக்களால் ''எருமைக் கடியான்'' என்று அழைக்கப்படுகிற ஒருவகை ராட்சதப் பூரான் குறிப்பிடத் தக்கது.

பூரான்கள் கடித்து விட்டால் உடன் கடிபட்ட இடத்தில் சுத்தமான கத்தி அல்லது பிளேடு கொண்டு சற்றுக் கீறி அமுக்கி இரத்தத்தை வெளியேற்றிவிட்டால் அதிக நேரம் வலியால் துன்பப் படாமல் விடுபடலாம். பிறகு காயத்துக்கு மருந்து போட வேண்டும்.

பெண் பூரான் முட்டைகளைத் தரையில் இடுகிறது. முட்டைகளைத் தன் உடலிலிருந்து வெளிப்படும் ஒருவகைத் திரவத்தால் நனைக்கிறது. இதனால் சுரப் பசை பெறும் முட்டைகளைச் சுற்றிலும் மண் நன்றாக ஒட்டிக் கொண்டு தரையில் முட்டைகள் இருப்பது தெரியாமல் மறைந்துவிடும். பின்பு முட்டைகளைப் பற்றிப் பெண் பூரான் எவ்விதச் சிரத்தையும் எடுத்துக் கொள்வதில்லை. பெண்ணால் இடப்பட்ட முட்டைகளை ஓர் ஆண் பூரான் பார்க்க நேர்ந்தால் உடன் அம்முட்டைகளைத் தன் உணவாக்கிக் கொண்டுவிடும். ஆகையால் பெண் பூரான் தன் முட்டைகளை மறைவான இடத்தில் இடுகிறது. ஆனால் சிலவகைப் பூரான்களில் பெண் பூரான் முட்டைகளைத் தன் வயிற்றுப் பகுதியில் வைத்து உடலைப் பந்து போல் சுருட்டி முட்டையிலிருந்து இளம் பூரான்கள் வெளி வரும்வரையில் பாது காக்கிறது. அத்தனை நாட்களும் உணவு கூட உட்கொள்ள மறுக்கிறது.



முட்டையிலிருந்து வெளிவந்த பூரான்கள் ஏழு ஜோடி கால்களைக் கொண்டதாகக் காட்சியளிக்கும். பின்பு இப் பூரான் நன்கு வளரும்வரை தன் மேல் தோலை உரிக்கும். ஒவ்வொரு தடவை தோல் உரியும்போதும் ஒரு ஜோடி கால் கூடிக் கொண்டே வரும். சில வகைப் பூரான்களில் முட்டையிலிருந்து வெளிவந்த இளம் குஞ்சிலேயே எல்லாக் கால்களும் இருக்கும்.

மனிதனுக்குத் தீங்கு விளைக்கும் புழு, பூச்சிகளை பூரான்கள் தங்கள் உணவாக உட்கொள்ளுவதால் ஒரு வகையில் பூரான்கள் மனிதனுக்கு உதவி செய்கின்றன என்றே சொல்லலாம்.

-அந்தோனி பேபில்

# எவ்வித உணவு வகைகளையும் தயாரிக்க வல்ல பஜாஜ் சாதனங்கள்














- பஜாஜ் பிரஷர் குக்கர்: ஒவ்வொரு அளவிலும் உபரியான சமைக்கும் கொள்ளளவு. பல அளவுகளில்-5 முதல் 11 லிட்டர்கள் வரை. ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஏற்ற அளவுகளில்
- பஜாஜ் ரௌண்ட் ஓவன்: சீனியர் & ஸ்டாண்டர்ட் கேக் மற்றும் இட்டிலி, முதலியன செய்வதற்கான அமைப்புகளுடன் கூடியது. பதார்த்தங்கள் பக்குவமான நிலை அடைவதைப் பார்க்கும்படியான அதிக உஷ்ணத்தை தாங்கக்கூடிய கண்ணாடி ஜன்னலுடன் கூடியது.
- பஜாஜ் சீனியர் மிக்சர்: கொள்ளளவு 1 லிட்டர் சுவைமிக்க சர்பத், மோர், முதலியன தயாரிக்கவும், சட்னி அரைக்கவும், மற்றும் உணவு வகைகளைக் கலக்கவும். தொடர்ந்து 30 நிமிடம் வேலைசெய்யும் தகுதி பரீட்சை செய்யப்பட்டது

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1.
இந்தியாவெங்கும் கிளைகள்.

'...ros'-BE-58 TAM

ஊர்வசி ஊர் திரும்ப எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்திருந்தாள். இனி அவளைத் தங்க வைப்பதென்பது இயலாத காரியம். ஏனெனில், அவள் பெண் வயிற்றின் கடைசிப் பேத்திக்குத் திருமணம் நெருங்கிக் கொண்டிருந்தது. அவள் போகாவிட்டால் திருமணக் காரியங்கள் எப்படி நடைபெறும்? ஏற்பாடுகள் முழுவதுமே அவள் பொறுப்பு. வேறு யார் இருக்கிறார்கள், பொறுப்புக்களையெல்லாம் அவளைப்போல் அக்கறையோடு கவனிக்க? ஊர்வசியின் பெரிய பிள்ளை எஞ்சினியர். அவனுக்கு அடுத்தவன் வழக்கறிஞன். அதற்கு அடுத்தவன்தான் உதவாக்கரை. பள்ளி ஆசிரியன் தொழிலே மேற்கொண்டிருந்தான். எப்பொழுதும் அவனுக்கு வேலை, வேலை, வேலைதான். ஓய்வே கிடையாது. கற்பது, கற்பிப்பது இதுதான் அவன் வேலை. இந்த உபாத்திமைத் தொழிலில் பெரிதாக என்ன கிடைத்து விடும்? மாதம் ஒருமுறை - சம்பளம் டியூஷன் என்று ஏதோ கிடைக்கிறதே, அவற்றைத் தவிர! இருப்பதற்குள் அவன்தான் உருப்படாதவன். கிடைப்பது கைக்கும் வாய்க்கும் தான் சரியாக இருந்தது. மூத்தவனின் பெண்ணுக்குத் திருமணம். அதற்குத் தான் ஊர்வசி வந்திருந்தாள்.

உரோ — ஊர்வசியின் சின்ன வயதுச் செல்லப் பெயர் உரோதான் — கட்டாயம் போய்த் தான் ஆக வேண்டும். அவள் போகாவிட்டால் எந்தக் காரியம்தான் செவ்வனே நடைபெறும்? அதற்காக அவளுடைய பெண் வயிற்று மூத்த பேரன் அவளைக் கையோடு அழைத்துப் போக வந்திருந்தான்.

ஊர்வசியின் தலைமயிர் முழுவதும் நரைத்துப் போயிருந்தது. ஓரிரண்டு கறுப்பு மயிர் மட்டும் அங்கங்கே தலைகாட்டிக் கொண்டிருந்தது. அதுவும் பார்ப்பதற்கு ஒரு விதத்தில் அழகாகத்தான் இருந்தது. அந்த ஓரிரண்டு கறுப்பு மயிர்களும் ஒரு காலத்தில் அவளது தலைமயிர் முழுவதும் கறுப்பாக இருந்தன என்பதை நிரூபிக்கவே நிலைத்திருந்தாற் போலத் தோன்றின. நெற்றி, கன்னம் மட்டும் என்ன, உடல் முழுவதுமே மூப்பு கோடிட்டுச் சுருக்கங்களைக் காட்டிற்று. அவளுடைய அகன்ற நீண்ட விழிகள் சிறுத்துச் சுருங்கி ஒளியிழந்து தோற்றமளித்தன. ஒரு காலத்தில் அவை கஞ்சனப் புள்ளெனச் சஞ்சலத்தோடும், ஒளியோடும் ஆழ்ந்து தோற்றம் அளித்தவைதாம். இப்பொழுதும்கூட அவை பார்க்க நன்றாகத் தான் இருந்தன; அழகாகத்தான்

# ஊர்வசி வந்தாள்!

ஸ்ரீனிவாச உத்காதா





ஒரியா



□

ஒரிஸ்ஸாவில் பாலங்கிரில் 6-1-1931ல் பிறந்த திரு ஸ்ரீனிவாச உத்காதா பி. ஏ. பட்டதாரி. நாலைந்து நாவல்களும், பல சிறுகதைகளும் எழுதிப் புகழ் பெற்ற இவர் தற்பொழுது 'பஞ்சரங்கா' என்னும் மூன்று மாதங்களுக்கொரு முறை வெளியாகும் விமர்சனப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியர். இவரது 'ஊர்வசி வந்தாள்' சின்னஞ்சிறு குடும்பக் கதையானாலும் தனக்குள் ஒரு வாழ்க்கை வரலாற்றையே மனத்தைத் தொடும்படி அடக்கிக் கொண்டிருக்கிறது.

□

தோன்றின. ஒளி குறைந்தாலும் உயிர்ப்புக் குறையவில்லை.

''உரோ! ஓரிரு நாள் தங்கிச் சென்றால் என்ன குடியா முழுகிவிடும்?'' என்று கேட்டேன் நான்.

''ஒன்றுமே தெரியாதவனைப் போலப் பேசுகிறாயே, அண்ணா! இந்தப் பொறுப்பான வேலைகளையெல்லாம் கவனித்துக் கொள்ள வீட்டில் யார் இருக்கிறார்கள்?''

வீட்டில் உள்ள எல்லோருமே அவளைப் பொறுத்தவரையில் 'அறியாக் குழந்தைகள்! பெரியவர் ஒருவர் இருக்கிறாரே, (அவர்தான் அவள் கணவர்) அவருமே ஓர் அப்பாவி. எதையும் கவனிக்க மாட்டார். காதில் போட்டுக் கொள்ள மாட்டார். எப்போது பார்த்தாலும் வராந்தாவில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து சில பத்திரிகைகளோடு உறவாடிக் கொண்டிருப்பார்; அல்லது போராடிக் கொண்டிருப்பார்! சிற்சில சமயம் அவர் தம் பேரன் பேத்திகளோடு விளையாடிக் கொண்டிருப்பதும் உண்டு. இந்த இரண்டு வேலைகளைத் தவிர அவர் மூன்றாவது வேலை என்று எதுவுமே அறியாதவர்.

உரோவா இப்படிப் பேசுவது?

அவள் பேச்சைக் கேட்கக் கேட்க எனக்கு வியப்பாக இருந்தது. அவள் கூறுவது சரியான வாதம் அல்ல என்பதனால் நான் வியப்புறவில்லை. அவளது இயல்பான பேச்சிலே சரியானது தவறானது என்ற பிரச்னைக்கோ இருமாறுபட்ட உணர்வுகளுக்கோ இடம் ஏது? ஊர்வசியின் பேச்சைக் கேட்டு நான் வியந்ததற்குக் காரணம் அவள் பேசும் முறையைக் கண்டு அல்ல; அவள் பேச்சின் துணிச்சலைக் கண்டு!

ஒரு காலத்தில் அவள் வாயிலிருந்து என்ன தான் பகீரதப் பிரயத்தனம் செய்தாலும் ஒரு வார்த்தை என்றால் ஒரு வார்த்தை வெளி வராது. அண்ணனுக்கு எதிரே பேசுவதற்கு மட்டுமா? தலை நிமிர்ந்து நிற்கக்கூட அவள் துணிந்ததில்லை. அவள் என்னிடம் வந்து தனக்கென்று எதுவுமே கேட்டதில்லை. பிறர் பற்றிக் குற்றம் குறை கூறியதும் இல்லை. அவள் மனத்தைப் புரிந்து கொண்டு யாராவது செய்தால் உண்டு. இல்லாவிட்டால் இல்லை. அவள் சின்னஞ் சிறு குழந்தையாக இருந்தபொழுதே தந்தை இறந்துவிட்டார். அன்று முதல் அவள் என் அன்பின் அரவணைப்பில் வளர்ந்துதான் பெரியவள் ஆனாள். அன்றையச் சின்னஞ் சிறு உரோ இன்று எத்தனை பெரியவள்!



உரோ இன்றே புறப்பட்டுவிடுவாள். அவளைத் தடுத்து நிறுத்துவது என்பது முடியாத காரியம். அவள் வீடு, அவள் வேலை, அவள் கடமை — எல்லாமாக அவளை அழைத்துக் கொண்டிருக்கும்பொழுது யாரால் தான் அவளைத் தடுத்து நிறுத்த முடியும்?

அவள் இங்கே வந்து முழுசாக ஒரு நிமிஷம் என்றால் ஒரு நிமிஷம் கூடத் தங்காமல் நொடியில் புறப்படுவதாகத்தான் எனக்குத் தோன்றியது. ஆம், அப்படித்தான் அவள் காலில் கலக் கஞ்சியைக் கொட்டிக் கொண்டு வந்திருந்தாள்!

எத்தனை நாட்களாகி விட்டன? கடந்த கால நிகழ்ச்சிகள் மறந்து போய் விடுவதாக மனிதன் நினைக்கிறானே, என்னைப் பொறுத்த வரையில் அது உண்மை அல்ல. காலம் வரும்பொழுது கடந்த காலத்து மறந்து போன விஷயங்கள்கூட நினைவுக்கு வருகின்றன. மனக் கண்ணாடியில் அவற்றின் பிரதிபிம்பம் தெளிவாகவே தோற்றம் தருகின்றன.

ஏனெனில் கடந்த காலத்தின் ஒவ்வொரு சிறு நிகழ்ச்சியும் அப்பொழுது என் மனக் கண் முன் காட்சி யளித்தன.

அந்தக் காலத்தில் உரோ ஒரு பொழுதும் தன் உள்ளத்து ஆசைகளை வெளியிட்டதில்லை என்பது என் நினைவுக்கு வந்தது. இன்னது, இனியது தனக்கு வேண்டும் என்று அவள் சொல்லி நான் என்றுமே கேட்டதில்லை.

இரண்டொரு முறைகள் அவள் அம்மாவிடம் சொல்லக் கேட்டிருக்கிறேன்: ''அம்மா! எனக்கு அண்ணனிடம் பேசவே அச்சமா யிருக்கிறது. நான் போய்ச் சொல்ல மாட்டேன். எங்கள் சார்பில் நீயே சொல்லு, எங்களுக்கு ஓர் அண்ணி வேண்டுமென்று. இந்த வீட்டில் எல்லாம் இருந்தும் ஒரே ஒரு குறை. அண்ணி இல்லாமல் இந்த வீடு வெறிச்சென்றிருக்கிறது. புக்ககத்திலிருந்து நான் வருகிறேன். சகோதரிகள் வருகிறார்கள். இங்கே வந்து யார் என்ன வேண்டுகிறார்கள் என்பது எனக்குத் திட்டவட்டமாகத் தெரியாது. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் ஓர் அண்ணியில்லாத இந்த வீடு கடிக்க வருகிறாற் போலிருக்கிறது; வெறிச்சோடிக் கிடக்கும் இந்த வீட்டைக் காண எனக்கு அழுகை அழுகையாக வருகிறது.''

நீர் நிறைந்த அவள் விழிகள், துயரம் ததும்பும் அவள் இதயம் — இரண்டையுமே நான் கண்டிருக்கிறேன். அவளுக்குத் திருமணம் நடந்த மறு நாள் பொழுது புலரும் நேரம். பொழுது விடிந்து விட்டால், அப்புறம் ஒரு நாள் தங்கியாக வேண்டும். புறப்படுவதற்கு அன்று வேறு நல்லோரையே இல்லை. அதனால் அவள் விடிவதற்கு முன்பாகவே புறப்பட்டாக வேண்டும். தன் வீட்டை விட்டு, தன் சகோதர சகோதரிகளை விட்டு, தன் தாய், தோழிகளை விட்டு, அவள் தன் வீட்டுக்குப் புறப்பட்டாக வேண்டும்! 'தன் வீட்டை விட்டுத் தன் வீட்டுக்குப் போவதா? இதென்ன புதிர்?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இனி அது தானே அவளுக்கு வீடு! இது வரை இருந்த இந்த வீடு? அவளைப் பொறுத்தவரை ஒரு சத்திரம்தானே?

மஞ்சள் நிற முகத் திரைக்குள் அவளுடைய முழு நிலா போன்ற முகம். நனைந்து நாணிய கண்களில் மை கலந்து விட்டதனால் கனத்துத் தோன்றிய கறுத்த கோடுகள், நெற்றியிலே செக்கச் சிவந்த வட்டமான குங்குமப் பொட்டு — எல்லாமே எனக்கு இன்னும் பசுமையாக நினைவு இருக்கின்றன. அதுமட்டுமா, உரோ விடைபெற்று எங்கள் எல்லோரையும் கண் கலங்க வைத்து விட்டுப்போய் விட்டாள் என்பதும் நினைவுக்கு வருகிறது!

அதற்குப் பின் அவள் எத்தனையோ முறைகள் இங்கு வந்திருக்கிறாள்! ஆனால் இந்தத் தடவைதான் பல ஆண்டுகள் கழித்து வந்தாள்!

இப்பொழுது இந்த வீட்டில் அவளுக்கு அண்ணியும் இருக்கிறாள். அண்ணிக்கு ஆசைப்பட்ட அந்த ஊர்வசி இன்றே புறப்படுகிறாள்! அவளைச் சில நாட்கள் தங்கிப் போகச் சொல்லலாம் என்றாலோ அது இயலாத காரியம். ஏனெனில், அவள் பெண் வயிற்றுப் பேத்திக்குத் திருமணம்!

''கேட்டியா? — கேட்டியான்னு கேட்கிறேன்!''

உள்ளிருந்து வந்த இந்தச் சொற்கள் என் காதுகளில் விழவில்லை. ஊர்வசியின் செவிகளில் விழுந்திருக்கின்றன. ''அண்ணி உள்ளே கூப்பிடுகிறாள் போலிருக்கிறது!'' என்று கூறியவாறு அவள் உள்ளே சென்றாள். நானும் எழுந்து அவள் பின்னால் சென்றேன்.

'' என்ன செய்து கொண்டிருக்கிறாய், அண்ணி ?'' என்று கேட்டாள் உரோ.

''எங்கே வைத்து விட்டாய், அந்தக் குங்குமச் சிமிழை? டப்பாவில் எடுத்துப் போட வேண்டும் என்றாயே!'' கேட்டது அவள்.

நான் மௌனச் சாட்சியாக நின்றேன். அவள் இங்கு அங்குள்ள பொருள்களையெல்லாம் மறக்காமல் உரோவுக்காக எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள்.

உரோ இனித் தங்கமாட்டாள். புறப்பட்டு விடுவாள் என்பதற்கான அறிகுறியை அங்கு கண்டேன். ஆனால் அவள் முகத்தில் தோன்றிய குறி....? 'அவளுக்குத் தங்கவும் மனம் இல்லை; போகவும் மனம் இல்லை' என்பதைக் காட்டியது. அவள் மனத் துயரம் முகத்தில் வடிவதாகத் தோன்றியது. அவள் இங்கே தங்கவும் நினைக்கிறாள். புறப்பட்டு விடவும் துடிக்கிறாள்! இதுதானோ பெண் மனம் எனப்படுவது!

புறப்பட வேண்டிய நேரம் வந்தது. கண்களில் நீர் கரக்கத் துயரம் மௌனச் சுமையாக அழுத்த என் அருமைச் சகோதரி உரோ நின்று கொண்டிருந்தாள். சட்டென மனத்தைத் தேற்றிக் கொண்டு அவள் குனிந்து என்னையும் தன் அண்ணியையும் வணங்கினாள். அண்ணி அவளை வாரி அணைத்துக் கொண்டாள். இருவரும் சிறிது நேரத்துக்கு ஒருயிராக என்ன, ஒருடலாகவே ஒட்டிப் போய் விட்டார்கள்!

உரோவின் கண்களிலும் அவள் அண்ணியின் கண்களிலும் மாரிக் காலத்து மடையெனக் கண்ணீர் உடைத்துக் கொண்டு பெருகியது. உரோ முதற்தடவையாகப் பிறந்த வீட்டை விட்டுப் போவது போன்ற உணர்ச்சியில் என் விழிகளும் பனித்தன.

— ரா. வீ.



# இவற்றை இப்பொழுது அழித்துவிடாதீர்கள்!

**இந்தக் கரங்களின் நிபுணத்துவம் தான் ஜவுளித் தொழிலுக்குத் தேவையான, இறக்குமதியாகும், இன்றியமையாத நூற்றுக் கணக்கான கச்சாப் பருத்திவகைகளைத் தரம் பிரிக்க வல்லது.**

**நிபுணர்கள்:** இந்தியாவின் பருத்தி வியாபாரிகள்.

**அவர்களுடைய குறிக்கோள்:** பருத்தி விலைகள் ஏறுவதைத் தடுத்தல். பருத்தி வியாபாரத்தைத் தட்டுத் தடங்கலின்றி நடத்துவதன் மூலம் இந்தியாவிற்கும், அதன் பஞ்சாலைகளுக்கும், அதன் மக்களுக்கும் சேவை புரிவது.

**எதிரி:** கச்சாப் பருத்தி இறக்குமதியை ஒருமுகப்படுத்தல்.

**ஆபத்து:** தொழில் அனுபவம் அற்றவர்களால், இன்றியமையாததொரு பணியிடும் சேவை வேரோடு அழிதல். பருத்தியின் விலைகளில் தீவிரமான ஏற்றம். பஞ்சாலைகளுக்கு பருத்தி சப்ளையில் தட்டுப்பாடு. ஏற்றுமதி வாணிபத்தின் அழிவு.

**பலி:** இன்று, இந்தியாவிலுள்ள 650 பஞ்சாலைகள். நாளை, நாடு முழுவதும்

**பாதுகாப்பு:** பருத்தி வியாபாரமும், பருத்தி, உணவுதானியங்கள், எண்ணெய் விதைகள் ஆகிய விவசாயப் பொருள்களின் விநியோகத்தில் ஈடுபட்டுள்ள வாணிபத்துறை முழுவதுமே நாசமாக்கப்பட இருக்கிறது. ஆனால் விநியோகத் துறையில் உள்ள அனைவருடைய ஒற்றுமையும் சக்திமிக்கது. அவர்களுடைய குடும்பத்தினர் உள்பட 6½ கோடி வோட்டுகள் பலம் கொண்ட ஒற்றுமை இது!

பிரேரேசிக்கப்பட்டுள்ள ஆல் இந்திய காட்டன் ஃபெடரேஷனின் ஆட்ஹாக் கமிட்டி

**ஜனநாயகமான வியாபாரத்தின் பாதுகாப்பாளர்களுடன் சேருங்கள். ஏற்கெனவே 6½ கோடி வோட்டு பலம் இருக்கிறது!**

# மலையும் மடுவும்

சீரவண்குமார்

நாய்கள் ஊளையிட்டால் எதிரிலுள்ள மலை முழைகளிலிருந்து துடிக்கும் பிரேதங்கள் எழுப்பும் ஓலந்தான், மலைப் பாறைகளில் மோதி எதிரொலிக்கின்றனவோ என்று தோன்றும். என் தூக்கம் திடீரென்று கலைவது போலவோ அல்லது நடைப்பிணமாகி விட்ட என் உடலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டு விட்டது போலவோ உணர்வேன். மாபெரும் ரகசியத்தை உள்ளடக்கி இருப்பதாக மீண்டும் எனக்குத் தோன்றும். ஆனால் இதெல்லாம் கணநேர உணர்ச்சிதான். ஏனெனில், அதைத் தொடர்ந்து என் உடல் கட்டையாகி விடும்.

ஓர் ஆண்டுக்குள் என் உடலிலும் உள்ளத்திலும் இப்படி ஒரு மாறுதல் ஏற்படக் கூடும் என்று என்னால் நம்பவே முடியவில்லை. என் உணர்ச்சிகள்தான் எப்படி மரத்து விட்டன! முன்பெல்லாம் பஞ்சைப் போலவும், பாலைப் போலவும், வெள்ளை வெளேரென்று பிரகாசிக்கும் பனிச் சிகரங்களைப் பார்க்கும் போதெல்லாம் என் உள்ளத்தில் ஓர் எழுச்சி ஏற்படும். மலைத்தொடரின் சிகரங்களில் மேகக் கூட்டங்கள் தவழ்ந்து செல்லும் போதோ, ஒன்றுகூடி முகாம் போட்டிருக்கும் பொழுதோ என்ன என்னமோ கற்பனைகள் சுரக்கும். இப்பொழுது அப்படியெல்லாம் ஏற்படுவதில்லை. இப்பொழுதெல்லாம் மலைகளில் நான் காண்பதெல்லாம் குன்றும் குழியும் உயரமும் தாழ்வும்தான். அல்லது அவற்றின் பெயரைறந்தாற்போன்ற நிலைதான்.

ஏப்ரல் மாதத்தில் புதுப் புதுப் பறவைகள் மலைச் சாரலை நாடிப் பறந்து வருவதைப் பார்த்தால் எழும் புல்லரிப்பும் மகிழ்ச்சியும் இப்பொழுது ஏற்படுவதில்லை. பூரித்த மார்பகத்தில் சின்னச் சின்னக் கண்ணாடிகள் அசைந்தாட எப்பொழுதும் வழித்தெடுத்தாற்போல் காணப்படும் மலைப் பகுதிப் பெண்களைப் பார்க்கும் போது முன்னைப் போல் உள்ளம் கிளர்ந்து மாய்வதில்லை. வாராந்திரச் சந்தைகளில் குடித்துவிட்டுத் தப்பட்டையின் தாளத்துக்கேற்ப வழி வகையின்றிக் கையையும் காலையும் ஆட்டிக் கொண்டு வரும் கிராம மக்களைக் காணவும் பிடிப்பதில்லை. இப்பொழுதும் அவர்களை யெல்லாம் கண்ணால் பார்ப்பதென்னவோ உண்மைதான். ஆனால் சிறிதும் மனமின்றிக் கடன் இழவுக்காக பைலைப் புரட்டும் சர்க்கார் சிப்பந்தியைப் போலத்தான் பார்க்கிறேன்.

என் உடல் விறைத்து உயிர் மரத்து விட்ட நிலைமையைக் காலை நேரத்தில்தான் அதிகமாக உணர்கிறேன். அப்பொழுது நான் என் படுக்கையில் முதல் நாளிரவு ஏற்பட்ட கனவுகளின் மயக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவனைப் போல், ஆடாமல் அசையாமல் படுத்துக் கிடப்பேன். போகப் போகத்தான் சூழ்நிலைக்கேற்றவாறு மனம் செயல்படத் தொடங்கும். அதில் வேடிக்கை என்னவென்றால் புதுமையுறும் கனவுகள் என்னைச் சின்னஞ் சிறு பாம்பு கடித்துவிட்டாற் போல எண்ண வைக்கும். காட்டாள் ஒருவன்

ஹிந்தீ





'ஆஜ்கல்' என்னும் ஹிந்திப் பத்திரிகையின் உதவியாசிரியராகப் பணியாற்றும் ஸ்ரீ சிரவண் குமார் மேற்குப் பஞ்சாபைச் சேர்ந்த குஜ்ரான் வாலாவில் 1931ம் ஆண்டு பிறந்தவர். ஆங்கிலம் ஹிந்தி இருமொழிகளிலும் எழுதி அநுபவம் பெற்ற இவர் பல சிறுகதைகளும் ஒரு சிறு நாவலும் எழுதியுள்ளார். 'மனையும் மதுவும்' உத்தியோகத் துறையில் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டி மனத்தில் அழியா ஒவியமாகப் பதிந்து விடுகிறது.

என்னை உடும்புப் பிடியாகப் பிடித்துவிட்டது போலத் துடிதுடித்துப் போவேன். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தால் அந்தப் பாம்பே மனித உருவம் எடுத்து விட்டாற்போலத் தோன்றும். என்ன ஆச்சரியம்! அந்த மனிதன் வேறு யாருமில்லை; என் அலுவலகச் சேவகன் தான்! துஷ்டன் எனக்கு எதிராக எத்தனை அநாமதேயக் கடிதங்கள் எழுதி அனுப்பிக் கொண்டிருந்தான்! ஆனால் நான் அவனைப் பற்றி எந்தக் குறையும் சொன்னவனல்ல. நான் என்ன இறந்து விட்டேனா, பொய் என்று அவன் சாதிப்பதற்கு? அவனிடம் நான் பெட்டிப் பாம்பாக அல்லவா அடங்கிக் கிடந்தேன்? அடே, இதென்ன? இவன் மீண்டும் பாம்பாகி விட்டானே! பாம்பின் வாயில் பீடி புகைகிறதே!.... ஹா....! ஹா.... அவன் ஒரு பாம்பு அல்ல. பல பாம்புகளாகி விட்டான்! எல்லாவற்றின் வாயிலும் பீடிகள்! நன்றாக ஊதி ஊதிக் குடிக்கின்றன! புகையை என் மீது விடுகின்றன. கடவுளே! என்ன அடர்த்தியான புகை! மூச்சுத் திணறுகிறதே! அடே! நான் யார் கையில் சிக்கியிருக்கிறேன்? அதே காட்டாள்தான். என்னை எப்படிக் கெட்டியாகப் பற்றியிருக்கிறான்? அவன் பிடி மேலும் மேலும் நட்சத்திரய்யனுகக் கிட்டி போட்டு இறுக்குகிறதே! நான் சக்கையாகப் பிழியப்பட்டுச் சாறு துளித் துளியாகத் தரையில் சிந்துவது போல் அல்லவா தோன்றுகிறது! ஆகா! என்ன பிரமை! அவன் தனக்கே உரிய முறையில் உறுமுகிறான். அதை அடுத்து என்னைப் பிடித்துப் படார் என்று தரையில் தள்ளுகிறான். என் கை, கால், தலை எல்லாம் உடைந்து தரையில் தனித்தனியாகச் சிதறிக் கிடப்பது போல் தோன்றுகிறதே! நான் விக்கித்துப் போகிறேன்.

"அதிகமாகக் காயம் படவில்லையே?"

அவன் மரியாதை காட்டிக் கேட்கிறான். நான் வியந்து நிற்கிறேன். மனிதன் எனப் படுபவன் காட்டாளிலிருந்து உண்டானவன்தானே? மனிதனா? இல்லை. இல்லை! என் எஜமானர்! "ஐயா, என்னை மன்னித்து விடுங்கள்! மன்னித்து விடுங்கள்!" என்று இறைஞ்சுகிறேன்: "நான் ஒரு தவறும் செய்யவில்லை. ஆயினும் எப்படியோ மாட்டிக் கொண்டு விடுகிறேன். மக்களும் எப்படியோ என்னைச் சிக்க வைத்து விடுகிறார்கள்.



# அன்றாட வாழ்வோடு இணைந்தது சிமெண்ட்

தண்ணீர்த் தொட்டிகள்,
வடிகால்களுக்குத்
தேவையான குழாய்கள்,
நடைபாதைகள்,
காம்பவுண்டுச் சுவர்கள்
எல்லாம் சிமெண்டால்
கட்டப்படுகின்றன

*உறுதிக்கும்*
*நீடித்த*
*உழைப்பிற்கும்*
*உன்னதமானது*

## செட்டிநாடு சிமெண்ட்




*தயாரிப்பாளர்கள்:*

**செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிட்.**




6, அரண்மனைக்காரன் தெரு, சென்னை-1
போன்: 27256
தந்தி: "BESTCEMENT"

தொழிற்சாலை: புலியூர் (கரூர்) திருச்சி ஜில்லா,
போன்: 144. தந்தி: "CEMENT"

எனக்கு இன்னும் ஒரு சந்தர்ப்பம் அளியுங்கள். தங்களுக்கு எது வேண்டுமோ, அதைக் கொண்டு வந்து சேர்க்கிறேன். பணம் வேண்டுமா? பணம் தருகிறேன். பெண் வேண்டுமா? பெண் தருகிறேன். ஆனால் ஆண்டவனுக்காக என்னை விட்டு விடுங்கள்! தயவு செய்து எனக்கு இவ்வளவு கஷ்டத்தை அளிக்காதீர்கள்.''

அப்பா! அக் கனவுகள்தான் எத்தனை பயங்கரமானவை! உடம்பெல்லாம் வியர்த்து விறுவிறுத்து விட்டது. மயிர்க் கால்கள் எல்லாம் முள்ளாகக் குத்திட்டு நிற்கின்றன! ஆனால் என்னை நான் தேற்றிக் கொள்ள முயல்கிறேன். என்ன இருந்தாலும் நான் இவ்வளவு கலவரப்படக் கூடாது! எங்கும் இப்படித்தான் நடக்கிறது. ஒவ்வோர் அலுவலகத்தின் நிலைமையும் இதுதான். எந்த அலுவலகத்திலும் இப்படித்தான் சூழ்ச்சிகள் நடக்கின்றன. ஒவ்வொரு காரியாலயத்திலும் இப்படி ஒரு கோஷ்டிப் பூசல் உண்டு. என்ன தான் என்னை நானே தேற்றிக் கொண்டும் என் மனம் நிம்மதியடையவில்லை. இந்த வேலையை விட்டு விட வேண்டும் என்று எனக்கு நானே கூறிக் கொள்கிறேன். நமக்குப் பிடித்தமில்லாத வேலையை நாம் ஏன் செய்ய வேண்டும்? மீண்டும் எனக்கு என்னுடைய 'மானுயுவல்' (குறிப்பு நூல்) நினைவுக்கு வருகிறது. — 'மானுயுவல் ஃபார் பப்ளிஸிடி ஆபீசர்ஸ்' [விளம்பர அதிகாரிகளுக்குக் குறிப்பு] நூலில் என்ன எழுதி யிருக்கிறது, தெரியுமா? ''நீ ஒரு குட்டித் தேவதூதன். பப்ளிஸிடி ஆபீசர்கள் என்றாலே புது யுகத்தின் தூதுவர்கள் என்று பொருள். திட்டங்களின் விவரங்களை மூலை முடுக்குகளிலெல்லாம் பரப்பு'' என்று அந்தப் புத்தகத்தில் அடிக்கு ஒரு தடவை வலியுறுத்தப்பட்டிருக்கிறது. மக்கள் கவனக் குறைவாக இருக்கிறார்கள். தூங்கி வழிகிறார்கள். அவர்களைத் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்புங்கள். ஒவ்வொரு திட்டப் பணியிலும் நாட்டம் கொள்ளச் செய்யுங்கள். விழித்துக் கொண்டு விட்ட பாரதத்தில் வாழும் பேறு பெற்றவர்கள் அவர்கள் என்பதை அறியும்படி செய்யுங்கள். நிரந்தரமாக இடையறாது விழிப்புணர்வு அவர்களிடம் எரிந்து கொண்டிருக்க வேண்டும். காலைக் கதிரவனைப் போன்று நாற்புறமும் அது ஒளி வெள்ளமாகப் பாய வழிவகை செய்யுங்கள்!''

ஆகா! என்ன அழகான சிறு சிறு வாக்கியங்கள்! ஒரு காலத்தில் இதைப் படித்ததும் கண் முன்னே விசாலமான காட்சி விரிவதுண்டு. பெரிய பெரிய அணைக்கட்டுகள் தோன்றும். அவை தேக்கி நிற்கும் நீர் கடலாக அலைமோதும். பெரிய பெரிய அணைகள்! — அவற்றின் நீர் வயல்களில் பரவிப் பாயும் பெரிய பெரிய அணைகள்! — அவற்றின் நீர் மின்சாரம் உற்பத்தி செய்யும்; ஊருக்கு ஊர் ஒளி பாய்ச்சும். அதைக் கண்டு மக்களின் முகங்களில் ஒரு புத்தொளி எழும். ஓர் அணை எழுகிறது, தன்பரப்பில் சமுத்திரம் போல் நீரைத் தேக்கிக் கொண்டு. பிறகு இரண்டாவது அணை, அதைத் தொடர்ந்து மூன்றாவது அணை — இப்படி அணைமேல் அணைகள் எழுகின்றன. அவற்றினின்று மின்சாரமும் உற்பத்தியாகிறது. ஆனால் ஒளி மட்டும் அவற்றிலிருந்து எழவில்லையே, ஏன்? மனித உள்ளம் என்னும் விளக்கும் அவற்றினின்று ஏன் ஒளியைப் பெற இயலவில்லை? ஏன், இந்த விளக்கில் எண்ணெய் இல்லையா? திரி இல்லையா? ஒருவேளை இந்த விளக்கின் கண்ணாடிச் சிம்னியில் புகை மண்டிக் கிடக்கிறதோ? அப்படியானால் இந்த விளக்கினின்று ஒளியைக் காண்பது தான் எப்படி?

ஐயோ, இந்தக் கெட்ட கனவுகள் ஏன் என்னை இப்படி விடாமல் துரத்தித் துரத்தி அடிக்கின்றன? அணுஅணுவாக நான் சாகாமல் செத்துக் கொண்டிருந்தேன். 'போதும்! போதும்! பட முடியாது. இனித் துயரம்! ரொம்பவும் உளைந்தாகி விட்டது!' என்று எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேன். ''இல்லை, இது என் தலையெழுத்தின் குற்றமோ? என் ரேகையைப் பார்த்து ஜோசியம் சொன்ன ஒருவரின் வார்த்தைகள் என் நினைவுக்கு வருகின்றன. ''நான் உறுதியாகச் சொல்கிறேன். உங்கள் வாழ்க்கையில் மகத்தான தொரு மாற்றம் நிகழப் போவதற்கான அறிகுறி தென்படுகிறது!'' என்றார்.

மாற்றத்துக்கு அறிகுறியா? நன்றாக இருக்கிறதே! ஆனால் என் வாழ்க்கையில் என்ன மாற்றம் நிகழக்கூடும்? எப்பொழுதாகிலும் யாராவது ஃபீனிக்ஸ் மாறுவதைப் பார்த்திருக்கிறீர்களா? நான் ஒரு ஃபீனிக்ஸ். இறந்தும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டியவன் நான். அடிக்கடி சாக வேண்டும். அடிக்கடி பிழைக்க வேண்டும். என் உள்ளத்தில் எதிர்கால நல்வாழ்வுக்கான நம்பிக்கை ஒளி வராவிட்டால் என்ன, மக்களின் உள்ளத்தில் அந்த ஒளி எழச் செய்தியாகப் பரப்ப வேண்டியவன் நான்.

''தைரியத்தை இழக்காதே! தம்பி தைரியத்தை இழக்காதே. ஒளி மிகுந்த எதிர்காலம் உன் எதிரில் உள்ளது!'' இப்படி என் உள்ளத்தைத் தேற்றிக் கொள்கிறேன். ஆனால் கண்ணை மூடினால், அதே பழைய காட்சிகள் என் எதிரே சுழல்கின்றன. என் அலுவலகத்தில் எனக்குக்கீழ் வேலை செய்பவர்கள் என் கண்முன்னே நிற்கிறார்கள். நான் அவர்களிடம் பின்வருமாறு சொல்லிக் கொண்டிருக்கிறேன்:

''நமக்குக் கிடைத்துள்ள எல்லா உபகரணங்களையும் நாம் செவ்வனே பயன்படுத்த வேண்டும். எந்தப் பொருளையும் பயன்படுத்தாமல் இருக்கக் கூடாது. ஏதாகிலும் ஒரு கிராமத்துக்குப் போனால் ஆம்ப்ளிஃபயர், மைக் முதலான ஒலிபெருக்கிக் கருவிகளைத் தயாராக வைத்திருக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் நமது பணியின் செய்தி எட்ட வேண்டும். தொலைவில் உள்ள கிராமங்களையெல்லாம்கூட நாம் சுற்றி வரவேண்டும். பிலிம்கள்கூட இம்முறைப்படி.....''

எனது இந்த யோசனைகள் அவர்களுக்குக் கொஞ்சமும் பிடிப்பதில்லை. அவர்கள் என்னைப் பார்ப்பதற்குப் பதில் இங்கும் அங்கும் பார்க்கிறார்கள். அவர்கள் உள்ளத்தில் நிகழும் போராட்டம் கண்களில் ஆட்டம் காட்டுவது போலத் தோன்றும்.

ஓர் உதவியாளர் தம் கழுத்து டை முடிச்சைச் சரிப்படுத்திக் கொண்டே, ''பிரசாரம் என்ற போர்வையில் நமக்கு நாமே தம்பட்

டம் அடித்துக் கொள்ளும் இந்த வேலை மிகவும் மட்டமான வேலை: நாம் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், கூலிக்கு மாரடிப்பவர்கள் அல்ல!'' என்கிறார்.

அவருக்கு அவருடைய கௌரவம் பெரிதாகப்படுகிறது.

இதைக் கேட்டு டிரைவருக்கும் துணிச்சல் உண்டாகி விடுகிறது. அவன் ''மூச்சு முட்டப் புழுதியோடு போராடுவதுதான் நம் தலைவிதியா?'' என்று தொடங்கிச் சாடுகிறான்: ''ஐயா, உங்களுக்குச் சொல்லித் தெரியவேண்டியதில்லை. இயன்ற வரையில் நல்ல செப்பனிட்ட சாலையோடு வண்டியை நிறுத்திக் கொள்ள வேண்டும். அதை விட்டு, நல்ல சாலைகள் இல்லாத ஊர்களுக்குள் எல்லாம் விடச் சொன்னால் வண்டியின் ஆயுசு குறைந்து விடும். சொல்லி விட்டேன்.'' அவன் குறை அவனுக்கு.










என் உதவியாளர் தமது புத்தம் புதிய மடிப்புக் கலையாத டெரிலின் பாண்ட் புஷ் ஷர்ட்டின் மீது பார்வையைச் செலுத்தி மேம்போக்கான தோரணையில் தொடங்கினார்: ''உலகம் முழுதும் உல்லாசமாகக் கும்மாளம் அடிக்கும்போது நாம் மட்டும் ஏன் சாக வேண்டும்? அப்படிச் செத்தாலும்தான், சர்க்கார் நமக்கென்று ஒரு ராஜகட்டமா எழுப்பப் போகிறது.....? பிலிம் ஷோ என்று ஒன்று காட்ட வேண்டும். அவ்வளவுதானே? ஒன்பது டாக்குமெண்டரி காட்டினால் என்ன, அல்லது ஒன்றே ஒன்று காட்டினால்தான் என்ன? பேச்சு விஷயம்கூட அப்படித்தான். நீங்கள் ஒரு வார்த்தை பேசினால் என்ன, பத்து வார்த்தை பேசினால் என்ன? பேச்சு ஒன்றுதான். கூட்டம் நடத்த வேண்டும். அதில் பத்து பேர் கூடினால் என்ன? பத்தாயிரம் பேர் கூடினால் என்ன? இதெல்லாம் உங்களுக்குத் தெரியாத விஷயங்கள் அல்ல. ஒரு கணக்குக் காட்ட வேண்டும். நாம் வாழ்வதோ புள்ளிவிவர யுகம். வக்கணையாகப் புள்ளி விவரம் காட்டுவது ஒன்றைத்தான் நமது மக்கள் மன்றங்களும் சட்ட மன்றங்களும் கோருகின்றன!''

நான் சிலையாகிவிட்டேன். என்னை விட்டுத் தைரியம் எங்கோ போய் விட்டது. உண்மையில் என் மேலதிகாரிக்கு அவன் கையாள் என்பது என் எண்ணம். குளவிக் கூட்டில் கை வைத்துச் சரியாகப் படிப்பினை பெற்றவனாயிற்றே நான்!

....திமர் என்று என் கண்களின் முன்னால் மற்றொரு சித்திரம் எழுகிறது: அதன் நிறம் மங்கி விட்டாலும்,–காலப் போக்கில் நிறம் பழுப்பாகி விடுவது இயல்புதானே? – எப்பொழுதோ ஏற்பட்ட அநுபவத்தின் கடுமை முன்போலவே சிறிதும் மங்காமல் பசுமையாக இருக்கிறது; கொட்டு வாய் விண் விண் என்று தெறிக்கிறது.

அடுத்த வீட்டுக்காரனின் வீடு பற்றி எரியும் பொழுது அதில் குளிர் காய்ந்தவனின் நிலை என்று அதைச் சொல்வதா? அல்லது வீடு பற்றி எரியும் பொழுது சுருட்டுக்கு நெருப்புக் கேட்ட கதை என்று சொல்வதா? விளங்கவில்லை.

அந்நாட்களில் ஒரு விசேஷ வேலை எங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அதற்காக வேண்டி நாங்கள் சுற்றுப் பயணம் புறப்பட்டோம். திடீரென்று வண்டி பாதி வழியில் நின்று விட்டது. 'வண்டி பிரேக் டௌன் ஆகி விட்டது' என்று கலபமாகச் சொல்லிவிட்டான் டிரைவர். அத்துவானமான இடம். எனவே, வந்திருந்த மற்ற பெட்பத்திகள் சுறுசுறுப்புக் காட்டி முழு மனத்துடன் முனைந்தார்கள். வண்டியும் சீர்ப்பட்டது. ஆனால் நாங்கள் புறப்படுவதற்கும் இருள் கவிவதற்

# இதோ, ஒரு தீமையற்ற தலைவலி மாத்திரை!



# அவேதன்®

## அற்புத 'எபெப்' அடங்கியது.

(என்-அஸிடில்-பி-எமினோ-ஃபினால்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக் கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமை யில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.

**2 டேப்லெட்டுகள்: 15 பைசா.**

**அவேதன்— அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.**






SQUIBB® SARABHAI CHEMICALS

* இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காரம்சந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi HPMA-57/70 Tam

ரும் சரியாக இருந்தது. நாங்கள் போய்ச் சேர வேண்டிய இடத்தை வெகு தாமதமாக அணுகினோம். இருந்தாலும் எங்களை எதிர்நோக்கி ஆதிவாசிகளின் ஒரு பெரும் கும்பல் உட்கார்ந்திருந்தது. 'பிலிம் ஷோ' ஆரம்பிக்கப்பட்டது. நாலா பக்கமும் மக்கள் உற்சாகமாக இருப்பது தெரிய வந்தது.

''ஆதிவாசிகள் — நம் நாட்டின் பூர்வ குடிகள் ஆதிவாசிகள்தான் நமது பண்பாட்டின் காவலர்கள். ஆதிவாசிகள்தான் பூமாதேவியின் புத்திரர்கள்.'' இப்படி எங்கள் 'புரோஜக்டர்' இயந்திரம் சொல்லிக் கொண்டே போயிற்று: ''அரசாங்கம் அவர்கள் வாழ்வு வளம் பெறப் பல்வேறு துறைகளில் திட்டங்கள் தீட்டிச் செயல்பட்டு வருகிறது.''

இந்தத் திட்டத்தினால் யார் யார் பங்குக்கு என்ன என்ன கிடைத்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால் அங்கு கூடியிருந்தவர்களிடையே ஒரு தெம்பு பிறந்தாற் போலத் தோன்றியது. புத்துயிரே பெற்றாற்போல் காட்சி யளித்தார்கள்.

புரோஜக்டரை இயக்கிக் கொண்டிருந்த என் உதவியாளர் திடீரென்று திகிலுற்றாற்போல் எழுந்து நின்றார். ''புரோஜக்டர் ஓடவில்லை'' என்று இயலாமையைத் தெரிவிக்கக் கையை விரித்தார்.

இது சொல்லி ஒருகணம் கடந்திராது.. விஷயம் நாலா திசையும் பரவிவிட்டது.

''கண்களில் மண்ணைத் தூவப் பார்க்கிறீங்கடா!'' என்று யாரோ ஒருவன் முணுமுணுத்தான்.

''மக்களின் பணம் இப்படித் தண்டமாகிறது!'' என்றான் அவர்களுடைய தலைவர்களில் ஒருவன். அவனுக்கு என்னவோ கோபம்.

நாலா பக்கங்களிலிருந்தும் இதே போன்ற கூக்குரல் எழுந்தது. கூச்சலுக்கு மேல் கூச்சல் ! அதைத் தொடர்ந்து எங்கிருந்தோ ஒரு கல் வந்தது. அது நேரே புரோஜக்டரைப் போய்த் தாக்கியது. அடுத்து வந்த கல் புரோஜக்டர் இயக்குநரைப் பதம் பார்த்தது. பலத்த காயம்; ரத்தக் களறி. கல் பட்ட இடமோ தலை! பொறுமையோடு அவர் எழுந்திருக்க முயன்றார். ஆனால் முடியவில்லை. மீண்டும் அதே கல்மழை. மக்கள் கூட்டத்துக்கு வெறி பிடித்து விட்டது. ''கொல்லு அவனை! கொல்லு அவனை!'' என்று குமுறிற்று !

போகப் போக இந்த விஷயம் விசுவரூபம் எடுத்து என் மேலிடத்துக்கு எட்டியது. அது என்னையே இவ்வளவு கலவரத்துக்கும் பொறுப்பாளியாக்கியது. 'என்னை ஏன் வேலையை விட்டு நீக்கக் கூடாது?' என்பதற்கு என்னையே காரணம் கேட்டு வாக்குமூலம் பெற்றது!

நான் பைத்தியம் பிடித்தவன் போல் ஆனேன். எனக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. எனக்காகப் பரிந்து பேசுபவரும் இல்லை. காரணம், நான் அப்படி யாருக்கும் 'அடிவருடி'யாக இல்லாததுதான்..... எனவே, நான் இருக்கும்பொழுது என் எதிரிலேயே சர்க்காரின் உடைமைகளுக்குச் சேதம் விளைந்துள்ளது என்றும் சர்க்கார் சிப்பந்தி ஒருவருக்குப் பலத்த அடியும் காயமும் ஏற்பட்டுள்ளன என்றும் என் மீது குற்றம் சாட்டப்பட்டது. 'இத்தனைக்கும் நானா பிணை?' விசித்திரமான சிக்கலில் அகப்பட்டுக் கொண்டு தவித்தேன். சிரமப்பட்டுத் தோன்றிய பதிலை அளித்தேன். தொடர்ந்து மேலாவுக்கு மனுவும் செய்து கொண்டேன். என் மனுவில் நான் சூசகமாகக் குறிப்பிட்டிருந்தது என்னவென்றால், 'என்னைத் தயவுசெய்து தலைமைக் காரியாலயத்துக்கே திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டும். அங்கு எனக்குத் தரப்படும் அலுவல் உண்மையை முறித்துத் திரித்துச் சொல்லக் கூடியதாக இல்லாமல் இருக்க வேண்டும்' என்பதுதான். இதற்குப் பதில் வரும் என்று எதிர்பார்த்தேன். வரவில்லை. மீண்டும் ஒரு கடிதம் எழுதினேன். அதற்கும் வரவில்லை. அப்புறம் மீண்டும் மீண்டும் எழுதினேன். ஊஹூம், என் மேலிடத்து வானுறை தெய்வத்துக்குக் கொஞ்சமும் இரக்கம் ஏற்படவில்லை. எனக்கு வேறு வழி தோன்றவில்லை. எல்லாருமே ஊமைகளும் செவிடர்களும் ஆகி விட்டாற் போல் தோன்றியது. எங்கிருந்தாகிலும் ஏதாவது நல்ல செய்தி கிடைக்காதா என்று ஆவலுடன் எதிர்பார்த்தேன். ஆனால் மூச்சுப் பிரியக்கூடாது. இப்படி நம்பிக்கை இழந்த நிலையில் ஒரு நாள் ஒரு கடிதம் வந்தது. அதைப் பார்த்ததும் ஓடிக் கொண்டிருந்த என் இதயம் ஒருகணத்துக்கு அப்படியே நின்று விட்டது. அதை ஒரு முறை படித்தேன். என் கண்களை என்னாலேயே நம்ப முடியவில்லை. மீண்டும் படித்தேன். அதில் எனக்கு மாற்றல் உத்தரவு வந்திருந்தது. வெகுதூரத்தில் உள்ள மலைப் பிராந்தியத்துக்கு மாற்றியிருப்பதாக. அதாவது இப்பொழுது நான் இருக்கும் இடத்துக்கு என்னை மாற்றியிருந்தார்கள்.

மலைகள், என் கனவுகள்! ஒரு காலத்தில் என் மனம் இந்த மலைகளுடன் எப்படி ஒன்றி உறவாடிக் கொண்டிருந்தது. ஆனால் இப்போது? இவற்றினிடம் எனக்குச் சிறிதும் பற்றே கிடையாது.

மலைச் சரிவுகளைச் சுற்றி முன்போல் என் கனவுகள் வளைய வருவதில்லை. மலைகள் ! இப்பொழுதெல்லாம் இம்மலைகள் மரித்த உயிர்கள் ஆலாய்ப் பறக்கும் பிரதேசமாக— பேய் பிசாசுகளின் குடியிருப்பாகத்தான் தோன்றுகின்றன.

வளைந்து வளைந்து செல்லும் மலைப் பாதையில் வெகு லாகவமாகச் சென்று கொண்டிருந்த ஜீப்பின் ஓட்டத்தில் நாங்கள் தூங்கி வழியலானோம். எதிர்பாராத நிலையில் ஓர் உலுக்கல்! காரணம், டிரைவர் திடீர் என்று 'பிரேக்' போட்டு நிறுத்தும்படியாகி விட்டது! சாலையின் நடுவில் ஒரு கிழவி கைகளை விரித்து நின்று கொண்டிருந்தாள். அவள் தலை முன் பக்கம் சாய்ந்திருந்தது — ஏசுநாதரின் உருவம் போல். ஜீப் நின்றதும் அவள் அதன் அருகில் பாய்ந்து வந்தாள். ஆனால் அவள் கால்கள் தடுமாறின. ஜீப்பின் முன் பகுதியின் மீது விழ வேண்டியவள் — தப்பினாள். நாங்கள் ஜீப்பை விட்டுக் குதித்து வெளியே வந்தோம்.

டிரைவர் அவளைப் பிடித்து நிறுத்தி, ''பைத்தியக்காரி !'' என்றான்.

நான் ''விட்டுவிடு, அவளை'' என்றேன்.

கிழவி என் பக்கம் பாய்ந்தாள். ''எங்கே என் குழந்தை?'' என்று கத்தினாள். ''என் குழந்தையை எனக்குத் திருப்பிக் கொடு !'' என்று ஓலமிடத் தொடங்கி விட்டாள்.




"புது வீடு கட்டிக் கிருகப் பிரவேசம் பண்ணி ருரே அவருக்கு என்ன உத்தியோகம் ?"
"ஸ்டுடியோவிலே ஆர்ட் டைரக்டர்!"

---

நல்ல வேடிக்கை! என்னை யாரோ பிடித்துப் பலம் கொண்ட மட்டும் உலுக்கி விட்டார்கள் !

"பின்னால் போ!" என்று சொல்லிக் கொண்டே கிராம மக்கள் குழும ஆரம்பித்து விட்டனர். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

ஒரு கிராமவாசி எனக்கு நிலைமை விளக்கும் வகையில், "பாவம், இவனுக்கு ஒரு பிள்ளை. அவன் இறந்து விட்டான் ! ஏனோ தெரியவில்லை. ஜீப்பில் வருகிறவர்களைப் பார்த்தால் இவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வருகிறது. அதில் வரும் ஒவ்வோர் அதிகாரியைப் பார்க்கும் போதும், அவர் தான் தன் மகனின் உயிரை வாங்கியவர் என்று நினைக்கிறான்!" என்றான்.

"என் மகன் மருந்து மாத்திரை ஒன்றுமில்லாமலே செத்து விட்டான்" என்று பிரலாபித்தாள் கிழவி.

"ஏன்? இங்கே மருத்துவ மனை ஏதும் இல்லையா ?" என்று கேட்டேன்.

"எங்களுக்கு ஆஸ்பத்திரியைத் தா !" கிழவி பல்லவி பாட ஆரம்பித்து விட்டாள்.

"இவர் என்ன தம் சட்டைப் பையில் ஆஸ்பத்திரியை வைத்துக் கொண்டிருக்கிறாரா?" என்று ஒரு கிராமவாசி அவளை அதட்டினார்.

"இந்தப் பக்கத்திலேயே எங்கும் ஆஸ்பத்திரி இல்லையா?" என்று அவரைக் கேட்டேன்.

"ஆஸ்பத்திரியா ? இந்தப் பக்கத்திலா? என்ன கேள்வி கேட்கிறீங்க? இந்தப் பக்கத்திலேயே பல காத தூரம் நடந்தாலும் ஆஸ்பத்திரியைப் பார்க்க முடியாது!" என்று பலரும் சேர்ந்து கொண்டார்கள்.

"ஆனால் உங்கள் கிராமத்தில் பஞ்சாயத்து இருக்குமே! இந்தப் பக்கத்துக்கு வட்டார வளர்ச்சிக் குழு, மாவட்ட நலக் குழு எல்லாம் இருக்குமே!" அவர்களுக்கு வழி காட்டுபவன் போல் சொன்னேன்: "இப்போது உங்களுக்கு நீங்களே எஜமானர்கள்!"

ஆம், நான் பிரசார அலுவலரின் வேலையைச் செய்து கொண்டிருந்தேன்;..... கடமையை ஆற்றிக் கொண்டிருந்தேன்.

"ஐயா, தாங்கள் சொல்வது மெய்தான். எங்களுக்கும் பஞ்சாயத்து என்று என்னமோ ஒன்று இருக்கிறது. அந்தச் சிறந்த பஞ்சாயத்தின் சிறு தலைவன் நான்தான்" என்று ஓர் ஆள் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். பஞ்சாயத்துத் தலைவன் என்று சொல்லிக் கொண்டு நின்றவனைப் பார்த்தேன். அவன் முக முடி கத்தியைப் பார்த்து வெகு நாட்களாகியிருக்க வேண்டும்.

"நீங்கள் எல்லாரும் முழுமூச்சுடன் முயல வேண்டும். உங்கள் பி. டி. ஓ.விடம் பேச வேண்டும்; டெபுடி கமிஷனரிடம் சொல்ல வேண்டும். மற்ற மற்ற அதிகாரிகளிடம் மனுச் செய்ய வேண்டும். ஏன், நீங்கள் நினைத்தால் மந்திரிமார்களிடம்கூடப் போய்ப் பேசலாமே!" என்று அவர்களுக்கு நம்பிக்கைக்கு மேல் நம்பிக்கை ஊட்டும் வகையில் பேசினேன்.

என் பேச்சைக் கேட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் தம் முகத்தில் ஒரு விந்தைப் புன்னகை செய்வதைப் பார்த்தேன். அதில் ஏளனமும் கலந்திருந்தது. "நாங்கள் ஒவ்வொரு வகையிலும் முயன்று பார்த்தோம்!" என்று கூறும்பொழுது தலைவரின் முகத்தில் வாட்டம் கண்டது.

"எந்த அதிகாரி இங்கு வந்தாலும் நாங்கள் அவரிடம் மனுச் செய்துகொள்வோம். இனிக்க இனிக்க எல்லாரும் வாக்களிப்பார்கள். இங்கிருந்து போனதும் மறந்து போவார்கள். நாங்கள் பல கடிதங்களும் எழுதி விட்டோம். ஆனால் அவர்களுக்கு ஒழிவு ஏது ?"

பஞ்சாயத்துத் தலைவர் என் மனத்தில் உள்ளதை விண்டுரைத்துக் கொண்டிருந்தார். என் மேலதிகாரியும் என் விஷயத்தில் இதே முறையைத்தானே கடைப்பிடித்திருக்கிறார்! நான் எவ்வளவோ மனுச் செய்து கொண்டேன். கடிதங்களுக்கு மேல் கடிதங்கள் எழுதினேன். எல்லாமே வீணாயின. பிறகு தான் அவருக்குப் பதில் எழுத நேரமே கிடைக்கவில்லை என்று தெரிய வந்தது. அவர் தம் ஆபீசுக்குள் தமக்கெதிராக நடக்கும் சூழ்ச்சிகளைச் சூழ்ச்சிகள் 'பல செய்து முறியடிப்பதில் முனைந்திருந்தார் ! பாவம், அவர் கவலை அவருக்கு.

ஆனால் என் கடமை என்னவென்பது மீண்டும் நினைவு வந்தது. "நீங்கள் எழுதிக் கொண்டே இருங்கள். எழுதி அவர்களை உலுப்பிவிடுங்கள். ஒரு சமயத்தில் அவர்கள் பதில் எழுதித்தான் ஆக வேண்டும் !" என்றேன்.

"கேட்பார்கள், கேட்பார்கள், கட்டாயம் கேட்பார்கள். அவர்களுக்கு....." பஞ்சாயத்துத் தலைவருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. உள்ளங் கையில் விரலைத் தேய்த்துத் தம் ஆத்திரத்துக்கு ஓர் உருவம் கொடுத்தாற்போல் காட்டினார்.

நானும் இம்மாதிரியே ஒரு விஷயத்தில் முடிவெடுத்தது நினைவுக்கு வந்தது. அதாவது...

வெறுப்புணர்ச்சியும் பகை உணர்ச்சியும் என் உள்ளத்தில் பொங்கிப் பொங்கி எழுந்தன. அதில் என் உள்ளமே பொசுங்கியது.

சுற்றுப்புறச் சூழ்நிலை பயங்கரமாகத்தோன்றியது. நான் பேச முயன்றேன். ஆனால் பேச முடியவில்லை. மெள்ள என் பாதங்கள் பின்னோக்கிச் சென்றன. திடீர் என்று குதித்து ஜீப்பில் அமர்கிறேன். "ஜீப்பைக் கிளப்பு" என்று டிரைவரிடம் சொல்கிறேன். 'கிராம மக்கள் வணக்கம் செலுத்துகின்றனர். நானும் பதிலுக்குக் கைகூப்புகிறேன்.

தமிழாக்கம் : எஸ். வீ. எஸ்

# மனமகிழும் காலைப் புத்துணர்வு மணிக்கணக்கில் நிலைத்திருக்க...

குளித்த பிறகு பாண்ட்ஸ்
ட்ரீம்ஃப்ளவர் டால்க்!
பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர்
டால்க்கின் நீங்காத
நறுமணம்...ஈரத்தை இழுக்கும்
தன்மை...நாள் முழுவதும்
காலைப் புத்துணர்வின் சுகம்.
இவை யாவரையும் உங்களிடம்
ஈர்க்கும்.

கோடையானாலும் இறுக்க
மானாலும் நறுமணத்துடன்
புதுமைப் பொலிவில், குளுமை
உணர்வில் உங்களை திகழ
வைக்கும். எக்காலத்துக்கும்
ஏற்ற பாண்ட்ஸ்
ட்ரீம்ஃப்ளவர் டால்க்.
இந்தியாவிலேயே அதிக
விற்பனையாகும் டால்க்.

மூன்று அளவுகளில்
கிடைக்கிறது.
ஃபாமிலி, பெரியது,
மத்திமம்.




**பாண்ட்ஸ்**

***ட்ரீம்ஃப்ளவர் டால்க்***

சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்

*சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்*

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏயில் இணைக்கப்பட்டது)

விடியற்காலை நேரம்.

செக்கச் சிவந்த வட்டத் தாம்பாளம் போன்று கதிரவன் கீழ் வானிலிருந்து மெல்ல மெல்ல உயர்ந்து வந்து கொண்டிருந்தான்.

கிழக்குத் திசையில் நீலம், இளஞ்சிவப்பு, பொன்னிற மேகங்கள் ஆகாயத்தில் பரவிக் கிடந்தன. மேற்குத் திசையிலோ, வானம் ரோஜா, பழுப்பு நிறப் பட்டாடைகளைப் போர்த்துக் கொண்டிருப்பது போன்று தோற்றம் அளித்தது.

நான் விண்வெளியைப் பார்த்தவண்ணம் என் கதையைப் பின்னிப் புனைந்து கொண்டு நின்றேன்.

இதைப் போன்றதோர் அழகிய காலைப் பொழுதாகத்தான் இருக்க வேண்டும். இதே போலத்தான் இன்பம் தரும் மென்காற்றின் அலைகள் கதாநாயகியின் கூந்தலோடு விளையாட வேண்டும். அவளின் மயக்கம் நிறைந்த கருவிழிகள் பூத்துக் குலுங்கும் நந்தவனத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும். "பசுமைப் பொலிவுடன் விளங்கும் இந்த மரங்கள்.... இந்த மலர்க் குலைகளின் விளிம்புகளிலிருந்து சொட்டிக் கொண்டிருக்கும் மதுவை நிகர்த்த பனித் துளிகள். இந்த நேரத்தில் 'அவர்' வந்து விட்டால்...!"

நேற்று மாலை நடந்த சம்பவத்தை நான் அடியோடு மறந்துவிட்டு என் புதுக் கதையின் 'பிளாட்' தயாரிப்பதில் ஆழ்ந்து விட்டேன். காதலின் தாபத்தையும் கடுவேகத்தையும், சித்திரித்து, இளம் உள்ளங்களின் இதயத் துடிப்பைத் துரிதப்படுத்தி, அபூர்வமான கற்பனைச் சம்பவங்களில் மூழ்கி எழச் செய்ய வல்ல அழகழகான சுவைமிக்க காதற்கதைகளை நான் புனைவதில்லை என்பது என் மீதுள்ள குற்றச்சாட்டு. அன்பும் ஆசையும் அளவின்றி நிரம்பி வழியும் அழகானதோர் உலகம். அதிலே உணர்ச்சிகளும், துடிப்புகளும், தவிப்புக்களும் பொங்கிப் பெருகும் கதை நிகழ வேண்டுமாம்.

அவர்கள் அப்படிச் சொல்வது தவறு. என்னால் எழுத முடியாதா என்ன!

கட்டுக்கோப்பில்லாத வீடுகளும், குடிசைகளும் நிறைந்து பரவிக் கிடக்கும் புதுக் குடியிருப்பு எதிரே தெரிகிறது. சுத்தமான, அழகழகான, சிறு வீடுகள். கண் கவரும் மாடிக் கட்டடங்கள், தோட்டங்கள் சூழ்ந்த பங்களாக்கள் ஆகியவை நிறைந்த பகுதியை ஒட்டினாற்போலத்தான் அது ஐந்தாறு ஆண்டுகளாக இருந்து வருகிறது.

அந்த நேரம் அது ஓய்ந்து கிடந்தது.

உடுக்க உடையும், உண்ண உணவும் இல்லாத நிர்க்கதியான முதியவர்கள், ஏழைக் குமாஸ்தாக்கள், அட்டெண்டர்கள், ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள், சேவகர்கள், கூலிகள் மட்டுமல்லாமல் திருடர்கள், கொள்ளைக் காரர்கள், கொலையாளிகளும்கூட அந்தப் புதுக் குடியிருப்பில் வசித்தார்கள். தலையைச் சாய்த்துக் கொள்ள அதைவிட நல்லதான வேறு இடம் அவர்களுக்குக் கிடைக்காததால் அங்கு இருந்தார்கள். யாருக்கேனும் குடியிருக்க இடமில்லை என்றால் அந்தக் "கடவுள் தந்த "நில"த்துக்குத் தம்மைத் தாமே குத்தகைக்காரர்களாக நியமித்துக் கொண்டுள்ள சிலரை அவர்கள் அணுகுவார்கள். நூறோ



பானிபத்தில் 1913ல் பிறந்த ஸாலிஹா ஹுஸைன் பஞ்சாப் பல்கலைக்கழக பட்டதாரி. புகழ்பெற்ற கல்வித்துறை நிபுணர் கே. ஜி. ஸையிதைன் அவருடைய சகோதரர். கணவரான டாக்டர் ஆபித் ஹுஸைன் பிரபல ஆங்கில, உருது எழுத்தாளர்.

ஸாலிஹா பதினேழு வயது முதற்கொண்டே எழுதி வருகிறார். நாவல், சிறுகதை, நாடகம், வாழ்க்கை வரலாறு, இலக்கிய விமர்சனம் ஆகிய துறைகளில் அவர் எழுதிய 27 நூல்கள் இதுவரை வெளி வந்துள்ளன. தில்லி நகரில் வாழும் இவர், அகில இந்திய ரேடியோவின் நிகழ்ச்சிகளிலும் அடிக்கடி பங்கு கொள்கிறார். ●






ஐம்பதோ கொடுப்பார்கள். உள்ளங்கை அளவு நிலம் கிடைக்கும். வசதிக்கேற்றபடி வீடோ, குடிசையோ அமைத்துக் கொள்வார்கள். ஒன்று அல்லது இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை யாராவது ஓர் உத்தியோகஸ்தர் அங்கு வருவார். லஞ்சம் கொடுக்க இயலாதவர்களின் வீடு வாசல்களை இடித்துத் தள்ளச் செய்வார். மற்ற வீடுகள்

பத்திரமாக இருக்கும். அப்புறம் பத்து இருபது நாட்கள் கழித்துப் பார்த்தால் பழைய இடங்களில் புதிய குடிசைகள் கட்டப்பட்டிருக்கும். தலை வைத்துப் படுத்துக் கொள்ள ஒரு சிறு இடம் கிடைத்து விட்டது. இதைவிடப் பெரிய பாக்கியம் வேறென்ன இருக்கப் போகிறது?

சிற்சில நேரங்களில் இங்கு போலீஸ் படையெடுப்பும் இருக்கும். சிலரைப் பிடித்துக் கொண்டு போவார்கள். அவர்களுள் சிலர் எப்படியோ திரும்பி வந்து விடுவார்கள். எந்தக் குற்றமும் செய்யாத சிலரை அடித்து உதைத்து, கட்டி இழுத்துக் கொண்டு போவார்கள். அந்த வீடுகளிலிருந்து அழுகை ஒலம் கிளம்பும். சற்று நேரத்தில் அடங்கி விடும். சிலரின் சட்டைப் பைகள் நிரம்பும். சிலர் சிறைக்குள் கிடந்து வாடுவார்கள். சிலர் தம் மீசைகளைத் தடவி விட்டுக் கொள்வார்கள்.

வருடத்தில் மூன்று நான்கு மாதங்களைச் சிறையில் கழிப்பவர்களுள் சீத்தா சிங்கும் ஒருவன். என் வீட்டின் பின்புறச் சுவரை ஒட்டினாற்போல் அவன் தன் குடிசையைக் கட்டிக் கொண்டிருந்தான். என் வீட்டு மாடி மேல் நின்று பார்த்தால் அவனுடைய குடிசையில் நடைபெறும் ஒவ்வொரு விஷயமும் நன்றாகத் தெரியும். என் வீட்டு நடவடிக்கைகளும்கூட அவனுக்குப் பெருமளவு தெரியும். கூர்மையான காதுகளும், எதையும் உற்றுக் கவனிக்கும் ''நோய்'' கொண்ட கண்களும் எனக்கு இருப்பதால் அவனுடைய குழந்தை குட்டிகள் ஒவ்வொருவரைப் பற்றியும் எனக்கு நன்கு தெரியும். உதாரணத்துக்குச் சொல்வதென்றால் சீத்தா சிங்கின் மகன் ஷேர்சிங் ஓர் இரவு முழுதும் தன் இளம் மனைவியை நையப் புடைத்ததும், தன் அம்மா, அப்பாவுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்ததும் எனக்குத் தெரியும். காரணம் இதுதான். குடிசை மிகச் சிறியது. அவனோ இளம் உள்ளம் படைத்தவன்! அந்த வீட்டில் என்றைக்குப் புலவுச் சோறும், அல்வாவும் தயாரிக்கப்படுகின்றன, என்றைக்குப் பட்டினி என்பது தெரியும். சீத்தா சிங்கின் மனைவி வாட்ட சாட்டமாகப் பருத்து வளர்ந்தவள். அதைவிட முக்கியமானது அவளுடைய நீள நாக்கு. கணவனுக்கும் மனைவிக்கும் எதனாலெல்லாம் சண்டை ஏற்படுகிறது என்பதெல்லாம்கூட எனக்குத் தெரியும். ஒருத்தனின் 'எருமை மற்றவனின் கஞ்சித் தொட்டியில் வாய் வைத்தது என்ற அற்பக் காரணத்துக்காகச் சீத்தா சிங்குக்கும் ஜும்மன் கானுக்கு மிடையே கத்திக் குத்துகள் நடந்ததையும் நான் அறிவேன்.

எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொண்டும் கேட்டுக் கொண்டும் உணர்ந்து கொண்டும்தான் இருக்கிறேன். ஆனாலும் எதிலும் நான் தலையிடத் துணிவதில்லை. மனைவியின் வாய் கணவனின் ''தொழில்'' இரண்டுமே அப்படிப்பட்டவை. கண்ணியமானவர்கள் யாரையுமே மிரள வைக்கக் கூடியவை. இருந்தாலும் நேற்று சீத்தா சிங்கின் மனைவி பஸந்தியை அடித்து நொறுக்கத் தொடங்கியதைக் கண்டு என்னால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. பஸந்திக்குப் பதின்மூன்று அல்லது பதினான்கு வயதுதான் இருக்கும். மெலிந்த உடல். நான் ஜன்னலின் அருகே நின்று என்னுடைய பெண் கல்லூரியிலிருந்து திரும்பி வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். சீத்தா சிங்கின் குடிசையிலிருந்து பெருங் கூச்சல் கிளம்பியது. அது ஒன்றும் புதிதல்ல. இருந்தாலும் நான் குனிந்து எட்டிப் பார்த்தேன். இந்த மாதிரிச் சண்டை சச்சரவுகளில் என்னதான் கவர்ச்சி இருக்கிறதோ! நல்ல அறிவும் தகுதியும் படைத்தவர்கள்கூடச் சற்று நின்று ரசித்துவிட்டுத் தான் போகிறார்கள்.

பஸந்தியின் அம்மா பழைய தோல் வார் ஒன்றை எடுத்துச் சுளீர் சுளீர் என்று அவளை அடித்துக் கொண்டிருந்தாள். அவள் தன் மெலிந்த கரங்களால் தலையையும் முகத்தையும் மறைக்க முயன்று கொண்டு கூச்சல் போட்டுக் கத்திக் கொண்டிருந்தாள். அதையும் மீறி அவள்மீது அடி விழுந்து கொண்டுதானிருந்தது. பஸந்தி நன்றாக உதை வாங்க வேண்டியவள்தான்!

கொடுவினையே உருவானவள் பஸந்தி. அப்பனோடு வாய் கொடுப்பாள். அம்மாவுடன் போராடுவாள். அண்ணன், அண்ணியைப் பொருட்படுத்தவே மாட்டாள். தம்பி தங்கைகளைக் காரணமில்லாமலே அடித்து நொறுக்கி அரை உயிராக்கி விடுவாள். அது மட்டுமா?

நாகரிகமானவர்கள் வாழும் இந்தக் ''காலனி''யில் உள்ளவர்கள், அந்தப் புதுக் குடியிருப்பில் வாழும் மற்றவர்கள் எல்லாருக்குமே அவள் மீது ஆத்திரம் உண்டு. தெருவில் போவோர் வருவோரை வலுச் சண்டைக்கு இழுப்பாள். வீட்டு வேலை செய்யும் பையன்களையும் பெண்களையும் துன்புறுத்துவாள். அடிப்பாள். நல்லவிதமாக உடை யணிந்து பள்ளிக்கூடத்துக்கும் கல்லூரிக்கும் செல்லும் கண்ணியமான குடும்பங்களைச் சேர்ந்த இளம் பெண்களுக்கு மனம் போனபடி பட்டம் சூட்டுவாள். கோரணி காட்டுவாள். பரிகாசம் செய்வாள். இவையெல்லாம் போக, சென்ற ஓர் ஆண்டுக்கு மேலாக இளைஞர்கள் மட்டுமின்றி நடுத்தர வயதுள்ள பெண்களும் கூட அவளைக் கண்டால் தப்பிச் செல்ல முயன்று கொண்டிருந்தனர். அவளுடைய சேட்டைகளைக் கண்டு வெட்கப்பட்டோ, அல்லது வேறு எந்த உணர்ச்சிகளின் விளைவாகவோ அவர்கள் வியர்த்து விறுவிறுத்துப் போவார்கள். அப்படி அவளிடம் அழகு எதுவும் இருந்ததாகவும் சொல்ல முடியாது. கிழிசல் துணி, பரட்டைத் தலை, செப்பு நிறம், ஒழுகல் மூக்கு, இவற்றுக்குரியவளாக அவள் இருந்தாலும் அவளுடைய அங்க அவயவங்கள் வயதுக்குத் தக்கபடி பருவ வளர்ச்சியை அடையப்பெற்றிருந்தன. அதனால் ஏற்பட்ட இனக் கவர்ச்சி மட்டும் அவளிடம் இருந்தது. அவளும் அதை உணர்ந்திருந்தாள்.

ஒருநாள் பயந்து பயந்து சீத்தா சிங்கிடம் பேசினேன். ''பஸந்தி இப்போது வயது வந்த பருவப் பெண்ணாகி விட்டாள். இப்படித் தெருவில் போவோர் வருவோரிடமெல்லாம் அவள் வம்பு வளர்த்துக் கொண்டிருப்பது நன்றா

வில்லை. அவள் மீது கொஞ்சம் கவனம் வைத்துக்கொள்ளப்பா!'' என்றேன்.

சீத்தா சிங் பெரிய சண்டைக்காரன், ஆபாச மொழி பேசும் பழக்கமுடையவன்தான். ஆனால் ஏனோ என்னைக் காணும் போதெல்லாம் கை கூப்புவான். தலை குனிந்தபடியிருந்த மரியாதையோடு பேசுவான். பேச்சிலே அறியாமையும் இருக்கும், அப்பாவித்தனமும் தொனிக்கும். ''அம்மா, அது உங்க பொண்ணு. நீங்களே சொல்லிப் பாருங்க. எங்க பேச்சை அவ கேக்கறதே இல்லே!'' என்றான். ஆனால் எனக்குத் தெரியும், அவன் வெறுமனே பாசாங்கு செய்கிறான் என்று. யாசகம் கேட்கும்படி அந்தக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்திருப்பதே அவனும் அவன் மனைவியும்தானே. அந்தக் குழந்தைகளால் தானே அவ்வழியாகப் போவதும் வருவதும் மக்களுக்குத் தொல்லை பிடித்த அனுபவமாகி விட்டது.

மாடியிலிருந்து நான் வேகமாக இறங்கிச் சீத்தா சிங்கின் குடிசையை நோக்கி நடந்தேன். பலபேர் அங்கு நின்று என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தார்கள். பஸந்தி இரண்டு கரங்களாலும் முகத்தை மூடிக் கொண்டு விழும் அடி ஒவ்வொன்றையும் குனிந்து கொடுத்து இடுப்பின் மேல் வாங்கிக் கொண்டிருந்தாள். அந்த இடத்தில்தான் அடியினால் தோன்றும் வலி குறைவாயிருக்கும் போலும்!

''இந்தக் குட்டியிடமிருந்து கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும். இந்தப் பேட்டைக்காரர்களுக்குப் பெருந் தொல்லையாகப் போய் விட்டாள்!'' தன் மூக்கின் மீது விரலை உராய விட்டுப் பேசினான் படித்த, பிரமாதமாக உடை யணிந்திருந்த இளைஞன் ஒருவன்.

''இந்தச் சிறுக்கியினாலே இந்த வழியாகப் போவதே முடியாத காரியமாகப் போய் விட்டதே!'' மற்றோர் இளைஞனின் கூற்று இது. சொல்லி முடித்ததும் தன்னையறியாமலேயே அவன் சீட்டி யடித்தான். திடீரென்று என்ன நினைத்தானோ, சுற்று முற்றும் பார்த்துக் கொண்டான். அவனுடைய உள்ளத்திலுள்ள களங்கத்தை யாரேனும் கண்டு கொண்டிருப்பார்களோ என்ற அச்சம் போலும்!

''ராம், ராம், ராம். இப்படிப்பட்ட பெண்ணைப் பெற்று வளர்த்து விட்டிருக்கிறீர்களே, இந்தச் சீத்தா சிங்கும் அவன் பெண்டாட்டியும். அடி, அடி, செம்மையாக உதை கொடு. எவ்வளவு அடித்தாலும் தகும்!'' என்று எரியும் நெருப்பில் எண்ணெய் வார்ப்பது போல் பேசினார், காலனியைச் சேர்ந்த பணக்காரப் பெரியவர் ஒருவர். அடக்கம், கட்டுப்பாடு எதுவுமின்றித் தன்னிச்சையாகத் திரியும் தம்முடைய ''அல்ட்ரா மாடர்ன்' குமாரிகளைக் கண்டிப்பதற்காக இவர் வெறுமனே கையை ஓங்கியது கூடக் கிடையாது என்பது வேறு விஷயம்.

மொத்தத்தில் அங்கு கூடி நின்றவர்களில் ஒவ்வொருவரும் ஏதாவதொன்றைச் சொல்லிக் கொண்டேதான் இருந்தார்கள். அண்டை விட்டார்களான இரண்டொரு பெண்கள்மட்டும் பஸந்தியின் தாயாரைப் பிடித்துத் தடுக்க முயன்றார்கள். ''ஏ கிழவி, போதும், நிறுத்து. அடிக்கச் சாகடிச்சுடுவே போலிருக்கே'' என்றனர். அப்படித் தடுத்தவர்களை அந்தத் தாய்க்காரி தள்ளிவிட்டுச் சீறினாள். ''சரிதான், போம்மே! என் பொண்ணு. அடிக்கிறேன், அடிக்காமே இருக்கேன். நீ யாரு?''

அந்தச் சந்தர்ப்பம் பார்த்து பஸந்தி தப்பியோடிக் குடிசைக்குள் புகுந்து கந்தல் துணிகளின் பின்னால் ஒளிந்து உட்கார்ந்து கொண்டாள். குடிசைக்குக் கதவு என்று ஒன்றிருந்தால்தானே சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொள்ள முடியும்!

'இந்த விதமாக அவளுடைய தோலையே உரித்தெடுப்பது போல் அவளை வதைப்பதற்கு இந்தத் தரித்திரம் பிடித்த பெண் என்னதான் செய்திருப்பாளோ, தெரியவில்

## கைமேல் பலன !







லையே?' என்று யோசித்தவளாக நான் பஸந்தியின் தாயாரிடம் பேச ஆரம்பித்தேன்.

''இங்கே பார், சௌந்தராணி! வயது வந்த பெண்ணை இப்படியெல்லாம் அடிக்கக் கூடாது. அப்புறம் வழி தவறிப் போய்விடுவாள்'' என்றேன். சினம் கொண்டு அவள் என்னை முறைத்துப் பார்த்தாள். ''நான் அடிப்பேன்! நீ யாரு கேட்கறதுக்கு?''

என் கோபத்தை அடக்கிக் கொண்டு, ''தான் பெற்ற குழந்தையை யாராவது இப்படிப் போட்டு அடிப்பார்களா?'' என்று சொன்னேன்.

''சரிதான், போ, போ! உனக்கென்ன தெரியும்? ரெண்டு வேளையும் சாப்பாட்டுக்கில்லாமப் போகுது. அப்பப் புரியும் இந்தப் பேகமுக்கு! தரித்திரக் கழுதை, நாசமாப் போறவ, அப்படியே முழுசா ஒரு ரூபாயையும் சாப்பிட்டுட்டா. எல்லாக் கொழந்தையும் பட்டினி கிடக்குது. இந்த ஓடுகாலி ஒரு ரூபாயை அப்படியே எடுத்துக்கிட்டா. அவள் கள்ளப் புருசன் கொடுத்த காசு. ஒரு ரூபாய்க்கு ஒரு சேர் ஆட்டா மாவு வரும். குழந்தைங்களுக்கு ஆளுக்கு ரெண்டு கவளம் தின்னக் கெடச்சிருக்கும்.''

கோபத்தை அடக்க இயலாதவளாக, விருட்டென்று குடிசைக்குள் நுழைந்து, பஸந்தியைப் பிடித்துக் கொண்டு மீண்டும் புடைக்க ஆரம்பித்தாள்.

ஆனால் இப்போது பஸந்தி எதிர்க்கத் தொடங்கி விட்டாள். எழுந்து நிமிர்ந்து நின்று கொண்டு இளமை வலு நிறைந்த தன் கரங்களால் தாயாரின் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். ''அடி, அடி. எவ்வளவு வேணும்னாலும் அடிச்சுப் பாரு. இனிமேல் ஒங்கிட்ட ரூவா நான் கொடுக்கப் போறதே யில்லே. ஆமா. சமோசா, சாட், கொக்கக் கோலா எல்லாம் நல்லாச் சாப்புடுவேன். ஏந் துட்டு, ஆமா, ஏந் துட்டு!'' என்று கத்தினாள்; திட்டினாள்.

இப்போது அவள் தன் தாயாரின் மீது கைநீட்டப் போகிறாள் என்று எனக்குப் பட்டது. உடல் நடுங்க நான் திரும்பி வந்தேன். நம் பண்பாட்டுக்கு விரோதமான அந்தச் செயலை நான் கண்ணால் காண்பதா!

ஆனால் நடந்து வரும்போதே பின்னால் திரும்பிப் பார்த்தேன். பஸந்தியின் ஓங்கிய கை தாழ்ந்து விட்டது. எனினும் வசவு மட்டும் தொடர்ந்து கொண்டிருந்தது. நான் முழுதும் மன அமைதி இழந்திருந்தேன் நான். சீத்தா சிங்கைக் கூப்பிட்டனுப்பிக் கொஞ்சம் பணம் கொடுத்தேன்.

அப்படியும் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. பஸந்திக்காகச் சற்றுக் கிழிந்த பழைய பட்டுச் சேலை ஒன்றும், மற்றக் குழந்தைகளுக்காகக் கொஞ்சம் தின்பண்டங்களும் கொடுத்தனுப்பியும் கூட என் மனம் நிம்மதியடையவில்லை. மனம் அமைதி யிழந்துவிட்டிருந்தது. ஏன்? எதனால் இப்படி இருக்கிறது? எனது தாய் நாட்டில் இன்னும் எவ்வளவு காலத்துக்கு இந்த அவல நிலை நீடித்திருக்கும்? நூற்றுக் கணக்கான கேள்விகள், தேள் கொட்டுவது போல என் உள்ளத்தைத் மாறி மாறித் துளைத்துக் கொண்டிருந்தன. இரவில் எவ்வளவு நேரம் கண் விழித்துக் கொண்டிருந்தேன் என்று எனக்கே தெரியாது! ஆயினும் பொழுது புலர்ந்தபோது எல்லாம் இன்பமயமாகவே தோன்றின. புதுக் காதல் கதையின் முழு ''ப்ளாட்''டும் மூளைக்குள் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தது. நேற்றைய நிகழ்ச்சிகள் அனைத்தும் மூளைக்குள் எங்கென்று தெரியாத ஓரிடத்தில் சென்று ஒளிந்து கொண்டுவிட்டன.

கதாநாயகி கதாநாயகனின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு....

திடீரென்று அடுத்த வீட்டிலிருந்து அழுகைக் குரல்கள் எழுந்தன. கூடவே பலர் பேசிக் கொள்வதும் கேட்டது. ஆனால் அவர்கள் அனைவரின் வாயிலிருந்தும் ஒரே செய்திதான் வந்து கொண்டிருந்தது.

''பஸந்தி ஓடிப் போய்விட்டாள்!'' என்பதே அது.

''அடடா!'' என்று என் வாய் முணகியது. நான் அங்கு விரைந்து சென்றேன்.

சீத்தா சிங் தலைமேல் கையை வைத்துக் கொண்டு ஒரு கருங் கற்சிலை போலத் தரையில் அமர்ந்திருந்தான்.

ஜாட் ஜாதிக்காரியான பஸந்தியின் தாயார் கயிற்றுக் கட்டிலின் மீது விழுந்து கிடந்தாள். அவளுடைய பேச்சு, மூச்சு, சக்தி அனைத்தையுமே பஸந்தி தன்னுடன் எடுத்துக் கொண்டு ஓடிவிட்டாளோ என்று எண்ணத் தோன்றியது. பஸந்தி செத்தே போயிருப்பாளோ என்று அங்கமனைவுக்கு நெஞ்சைப் பிளக்கும் குரலில் அவள் அழுது கொண்டிருந்தாள்.

''அடி என் செல்லக் கண்ணு! என் அருமைப் பொண்ணு! உன்னை எங்கே போய்த் தேடிக் கொண்டாருவேன்!'' என்று ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள்.

பஸந்தியின் அண்ணி முக்காட்டை முன்னால் இழுத்து விட்டுக் கொண்டு இன்னும் அவள் வயிற்றுக்குள்ளேயே இருக்கும் நான்காவது குழந்தையைக் கையால் தாங்கிப் பிடித்தவளாக, நாத்தனாரைக் கண்டபடி வைது கொண்டிருந்தாள். அண்ணனின் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்திருந்தன. ''ரெண்டு பேருடைய ரத்தத்தையும் உறிஞ்சிக் குடிச்சிடுவேன். என் பேரு புலி சிங்கமாக்கும். ஆமாம். ஷேர் சிங்!'' என்று உறுமிக்கொண்டிருந்தான்.

பஸந்தியின் தம்பி, தங்கைகள், அண்ணனின் பிள்ளைகள் ஆக ஆறேழு குழந்தைகள் அரற்றிக் கொண்டிருந்தன. ஆடைகளின்றி அழுக்கேறிய மேனியரான அக்குழந்தைகள் பசி தாளாமல் கத்திக் கொண்டிருந்தனவா? அல்லது பஸந்தியைத் தேடி அழுதனவா என்று சொல்ல முடியவில்லை!

ஆண்டவனே!

என் சுவையான, அழகான காதற் கதை மீண்டும் ஒரு முறை என் கையை விட்டுத் தவறி எங்கோ போய் ஒளிந்து கொண்டு விட்டதே!

தமிழாக்கம்: எம். ஸைபுத் முகம்மது




★இக்குறியிட்ட கடிதம் ரூ. 16/- பரிசு பெறுகிறது.

**ச**மீபத்தில் இரு கல்லூரிகளுக்கிடையில் நடைபெற்ற கலாட்டாவின் முடிவு இரண்டு பேர் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர். இரண்டு கல்லூரிகளும் காலவரையறையின்றி மூடப்பட்டன. (பச்சையப்பன் கல்லூரியும் ஜெயின் கல்லூரியும்) விளையாட்டினிடையில் ஏற்பட்ட சிறு தகராறில் விளைந்தது இந்த விபரீதம். 'மெஸ்'ஸிலிருந்த உணவு வகைகளும் மேஜை நாற்காலிகளும் ஜெயின் கல்லூரியின் கிணற்றில் போடப்பட்டன. யாருக்கும் பயன்படாமல் போயின. விஞ்ஞானக் கூடங்களின் கண்ணாடிக் கதவுகள் தூள் தூளாக்கப்பட்டன. கல்லெறியும் நடைபெற்றது. சம்பவம் நடைபெற்ற இடத்தில் கல்லூரி முதல்வர்களும் இருந்தனர்.

தங்கள் முதல்வர்களுக்கும் பெற்றோர்களுக்கும் அடங்கி வாழாமல் மாணவ சமுதாயத்தைச் செயற்பட வைக்கும் சக்தி எது என்று விண்டுரைக்க வேண்டுமா?

இதுபோன்ற நிலவரங்களை வெளிநாட்டினர் டெலிவிஷனில் காட்டும்போது மட்டும் நம் ஆட்சியினர் ஆத்திரம் அடைகின்றனரே, இது நியாயமா? முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியாது. நம்மை நாமே சீர்ப்படுத்திக் கொள்ளவும் தேசம் முன்னேறவும் நல்ல திட்டங்கள் தேவை. அவை வறட்டுச் சித்தாந்தங்களை விட்டு யதார்த்த ரீதியில் அமைந்தாலன்றி சுபிட்சம் பெருகாது. எதிர் காலத்தில் மாணவர்களுக்கு நம்பிக்கை பிறந்தால் ஸ்டிரைக், கலாட்டா எல்லாம் பெரும்பாலும் குறைந்துவிடும்.

சென்னை–1
10–9–70 எம். ராமமூர்த்தி

**"ரா**ஜபாளையத்தில் போட்டிக் கொடி ஒன்று போட்டு, அதில் நாய்ப் படமும் வரைந்திருக்கிறார்களாமே?" இது கேள்வி. "போட்டிக் கொடியைப் போட்டவர்கள் தங்களது உருவத்தையும் அதில் பதித்திருக்கிறார்கள் போலிருக்கிறது!" இது பதில்!

"தொடர்ந்து நீங்கள் மத்திய சர்க்காருக்கு ஆதரவு கொடுத்தால் சுதந்திரக் கட்சியின் ஆதரவை நீங்கள் இழப்பீர்கள்" — இது திரு சீமைச்சாமி அவர்களது எச்சரிக்கை. "தலையிருக்க வாலாடுகிறதே!" இது பதில்!

"தனிக் கொடி கேட்கிறீர்களே, நியாயமா?" இது கேள்வி. "ஹனுமானுக்கு ஒரு கொடி இருக்கிறது. முருகனுக்குச் சேவல் கொடி இருக்கிறது. அது போல தமிழ் நாட்டுக்கு ஒரு கொடி வேண்டும்." இது பதில்!

பொறுப்பு மிகுந்த ஒரு பதவியில் உள்ளவர் கொடுக்கக் கூடிய பதில்களைப் போலவா இவை இருக்கின்றன?

சங்கரன்கோவில்,
10–9–70 பி. எஸ். சண்முகசுந்தரம்

★**ந**மது பிரதமர் யாரையும் கேட்காமல் திடீர் என்று ஒருநாள் மொரார்ஜியிடமிருந்து நிதி இலாகாவைப் பறித்துக் கொண்டார். அதற்கடுத்த நாள் முக்கிய பாங்குகள் தேச உடைமையாக்கப்பட்டு விட்டதாக அவசரமாகப் பிரகடனப்படுத்தினர். மனச்சாட்சியின் பெயரைச் சொல்லிச் சொந்தக் கட்சி வேட்பாளரை ஜனாதிபதி தேர்தலில் தோற்கடித்தார். இப்போது ராஜ் மான்ய ஒழிப்பு மசோதா மக்கள் பிரதிநிதிகளால் தோற்கடிக்கப்பட்டதும் கொதிப்படைந்து உடனே மன்னர்கள் அங்கீகாரத்தை ஜனாதிபதியின் உத்தரவு மூலம் ரத்துச் செய்து விட்டார்.

இப்படித் திடீர் திடீரென்று உணர்ச்சி வசப்பட்டு ஜனநாயகத்துக்கு விரோதமாக சோஷலிஸத்தின் ஒவ்வொரு படியாக ஏறுவது பிரதமருக்கும் அவரது சகாக்களுக்கும் அரசியல் 'ஸ்டண்'டாகத் தோன்றலாம். பதவியில் நீடிக்கச் சிலரது ஆதரவு கிட்டலாம். ஆனால் இதனால் பாதிக்கப்படுவது அவரோ அவரது சகாக்களோ அல்ல; நமது ஜனநாயகம் பலியாக்கப்பட்டு வருகிறது. நாட்டு மக்கள் உரிமைகள் இழந்து அடிமை வாழ்வு நோக்கி விரட்டப் படுகின்றனர்.

உதகமண்டலம்,
7–9–1970 வி. வி. சங்கரன்

**நா**ம் ஒரு ஜனநாயக விரோதி என்பதை மீண்டும் நிரூபித்து விட்டார் ஸ்ரீமதி இந்திரா.

மசோதா பாராளு மன்றத்திலும் மேல் சபையிலும் தாக்கல் செய்யப்பட்டு ஒரு வோட்டு வித்தியாசத்தில் தோற்றுப் போய் விட்டது. அதே மசோதாவை மீண்டும் சபையில் கொண்டு வந்து நிறைவேற்ற வழி இருக்கும் போது ராஷ்டிரபதியின் அதிகாரத்தின் பேரில் மசோதாவை அமுலுக்குக் கொண்டு வந்திருப்பதிலிருந்து ஜனநாயகத்துக்கெதிரான பெரும் போரைத் தொடங்கிவிட்டார் ஸ்ரீமதி காந்தி.

ஸ்ரீமதி காந்தி இந்த நடவடிக்கையின் மூலம் நாட்டை எந்தப் பாதையில் அழைத்துச் செல்கிறார் என்பது புலனாகிறது. ஸ்ரீமதி காந்தி பாராளு மன்ற ஆட்சி முறையையே கேலிக்கூத்தாக்கி விட்டார். இதைவிட அவமானகரமான விஷயம், 'நாங்கள் ஜனநாயகத்தில் நம்பிக்கை உள்ளவர்கள்' என்று சொல்லிக் கொள்ளும் தி. மு. க. அ. த. ; பா. கி. த.; மற்றும் ச. சோ., பி. சோ போன்ற கட்சிகள் ஸ்ரீமதி காந்தி சர்க்காரை ஆதரிப்பதுதான்.

திருப்பத்தூர்,
9–9–70 பி. எஸ். ஆறுமுகம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற் சாலைகளும், டெங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோ கிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு ! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப் பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக

பாதுகாப்பு அளிப்பதற் கேற்ற முறையில் செய்யப் பட்டது நவ-தால். பித்தளை, எஃகிலுலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்கு கிறது. தயாரிப்பவர்கள் : கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்ப தில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடைய வர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
60 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் ✓ எப்போதும் நம்பகமான பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon